# சென்னை திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி திருவெழுகூற்றிருக்கை

வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இயற்றியருளியது.

காப்பு

நேரிசை வெண்பா

*ஏனோர் விதிதொட் டெழுகூற் றிருக்கைசொல்லி*
*யானோர் பதிகூற் றிருக்கையுஞ்சொற்—றேன்ஓர*
*என்துணிவார் ஏழ்கூற் றிருக்கையுஞ்சொல் லென்றுகண்ணன்*
*இன்றுரைத்தான் ஈதறிவார் யார்.*

திருவெழுகூற்றிருக்கை

*(நிலைமண்டில ஆசிரியப்பா)*

*ஒருபெருங் கரத்தால் ஒருமலை யெடுத்தன்(று)*
*இருமருப் பானினம் ஒருங்கு காத்தனை:*
*ஒருகா ரணத்தால் இருதாய் மகவாய்*
*மூவாப் பொதுவர் முல்லை யிருநகர்*
*ஒன்றிடை வளர்ந்தனை; ஒரு பேயுயிருண்(டு)*
*எஞ்சலில் களியொடு மூன்று பொழுதினும்*
*நாலத் தூக்கிய உறித்தயிர் கவர்ந்தனை:*
*மூன்றுல கடர்தரும் இருமரு தழிப்பான்*
*ஒருரற் கட்டுண்டு ஒருவா றழுதனை:*
*இருதிரு வடியாற் சகடு கொன்றனை;*
*முந்நாற் புலவர்தம் ஐவகை நிறத்த*
*நாற்கவி சூடினை: மூவிரு சமயத்து*
*ஒன்றுந் தேவரும் யானொருவ னேயென*
*இரங்குபு மூன்றும் மைத்துனற் குணர்த்தினை;*
*நாற்பயன் விழைவார்க் கஞ்சல் நல்கி*
*ஆறமர் சடையான் ஆதியர் வழுத்த*
*அல்லிக் கேணிக்கு ஐயென அமர்ந்தனை;*

நான் கூறிடு முத்தமிழ்க் கவியொலியும்
இருகாதிடை கொளற்(கு) ஒருசிறிது வேட்டனே:
ஓரம் ஆர்ந்த இருமையிற் கொடியார்
அவையிடை முத்தொத்து அறலுகுத் தழுதாள்
உவகையி னலுன் னுயரருள் விளக்கினே;
ஐவர் ஒற்றெனும்பேர் ஆறென வேற்றனே:
எழுநிகர் பலதோள் வாணற் செற்றனே:
அறுவை பற்பலகொண்டு அணிமர மேறினே;
ஐங்கணைக் கிழவனே மகவாப் பெற்றனே;
நாலொடு மூன்று நன்மகர்த் துணித்த
ஈர்வா ளேந்தும் ஒருபெரு மாமனைக்
கடற்படை யுடன்கெடக் காய்ந்தர சாண்டனே;
கண்ணனுன் திருப்பேர் காசில தாயின்
என்துயர் கண்டே யிருப்பா யாதலின்
நந்துறத் தணந்து நலமுழு தருள்வாய்

செச்சை ஆங்காங்குத் தெரிதர நிவந்த
பச்சைமால் வரைநேர் பார்த்த சாரதியே.

---

குறிப்பு:

ஒரு காரணத்தால்-துஷ்டநிக்ரஹம் என்ற ஒரு காரணத்தினுல். இருதாய்-—தேவகி, யசோதை. பொதுவர் - இடையர், ஆயர். இருநகர்-வடமதுரை, கோகுலம். ஒன்றிடை-கோகுலத்தில். பேய்-பூதனே. களி-மகிழ்ச்சி. மருது-மருதமரம். ஒருவாறு-உதடுதுடிக்கும்படி. முங்நாற்புலவர்-பன்னிரு ஆழ்வார்கள். ஐவகை-வெண்பா, ஆசிரியம், கலி, வஞ்சி, மருட்பா. நாற்கவி-ஆசு, மதுரம், சித்திரம், வித்தாரம். மூவிருசமயம்-ஷண்மதங்கள். மூன்ரும் மைத்துனன்-அருச்சுனன், உணர்த்தினே-கீதையின்மூலம் நாற்பயன்-அறம், பொருள், இன்பம், வீடு. ஐ-தலைவன். ஓரம்-பட்சபாதம். இருமை-சொல்லும் செயலும், அவை-சபை. அறல்-கண்ணீர்த்துளி. அழுதாள்-திரெளபதி. ஒற்று-தூதன். ஆறு-சிறந்த அறம். எழு-தூண். வாணன்-பாணுசுரன். அறுவை-ஆடை. ஐங்கணைக்கிழவன்-மன்மதன். ஒரு பெரு மாமன்-கொடுமையில் ஒப்பற்ற மாமன்: கம்சன். செச்சை-சந்தனக்குழம்பு. காசு-குற்றம். நந்து-சாதல்துன்பம். தணந்து-போக்கி. உயிருண்டு-'இரு' என்ற எண் பெறப்படும். இரங்குபு-'இரண்டு' என்ற சொல்லின் ஒலி தொனியாகக்கொள்க.

# திருவல்லிக்கேணி ஸ்ரீ வேதவல்லி மாலை

வித்வான் கா. ப. வேங்கடகிருஷ்ணமாசாரியர்,
*தமிழாசிரியர், துரைத்தன உயர்கலாசாலை, பொலாரம், டெக்கான்.*

காப்பு

*[நேரிசை வெண்பா]*

திருவல்லிக் கேணி யுதித்தருளுந் தேவி
மருமல்கி மேவும் மலர்போல்—திருவடிக்குச்
சூட்டுவன்சொன் மாலை சுரர்வேந்தன் மைந்தன்தேர்
ஓட்டுமவன் வந்தான் உளம்.

நூல்

*[கட்டளைக் கலித்துறை]*

1. திருவே! தெளிந்தசெந் தேனே! வடியிட்ட தெள்ளமுதின்
உருவே! மடப்பிள்ளை யோதிமமே! சொல்லு மொருகற்ப
தருவே! நின் றுமரைத்தாளே சரணஞ் சரணங்கண்டாய்!
மருவே! மிகுசெம் மலரே யுறையொண் மறைக்கொடியே!*

2. செங்கமலக் கண்ணல் தண்ணருள் சேர்ந்ததிரு நோக்கமும்
தங்குமொர் பூவின் பொலிவுற்ற தாளுந் தமியேனுக்குப்
பொங்கிவ ரும்பிறப் பேகத் தயைசெய்வாய்; பொன்மகளே!
மங்குல் தவழ்மின் னிடையாய்! மயிலே! மறைக்கொடியே!

3. வடிவாய்த் திருமால் வலமார் புறையும் வனிதாய்! செம்பொன்
முடியாய்! முடிவில் புகழாய்! அளிகள் முரலுந்தாராய்!
அடியார் பிழைகள் கருதாய் மலர்போ லடியாய்! பூவின்
வடிவார் விழியாய்! வரமே தருவாய்! மறைக்கொடியே!

4. பலகுற்றஞ் செய்தாலுந் தன்பிள்ளை தாயத னைப்பாராமல்
இலைகுற்ற மென்றே மொழிவ ளிதுநீ யறிந்ததன்றோ?
சிலையுற்ற நன்னுத லாயிவ்வுலகங்கட் கீன்றுயே! யென்
மலையுற்ற குற்ற மெலாம்பொறுத் தாள்வாய்; மறைக்கொடியே!

5. அரிசினத் தாலீன்ற தாய்வெறுத் தாலு மவளிடத்தாம்
அருணினைந் தேசே யழுந்தன் மையதா மதுவேபோற்கார்
இருடலை நாணுங் குழன்மட வாயென் னிருவினையின்
மருளொழிப் பாயஃதில் லேனுஞ் சரண்யான் மறைக்கொடியே!

* மறை-வேதம்; கொடி-வல்லி.

6. உன்பெய ரோர்கா லுரையாத வாயு முவந்துள்ளாத
வன்மன முந்தொல் புகழ்கேளாக் காதும், வலந்தினம்வந்
துன்றிருக் கோயில் நுழையாத காலு முனக்குத்தொண்டு
மன்னிப் புரியாக் கரமும்வீண் பாழ்காண்! மறைக்கொடியே!

7. மட்டிட்ட கூந்தல் வனப்பும், மதியார் புருவமும்வார்
கட்டிட்ட மார்பும் சிவந்த கனிவாயுங், கத்தூரியாற்
பொட்டிட்ட நெற்றியும், பொன்மாலைக் கந்தரமும், பொற்றூசும்
வட்டிட்ட சொல்லும், அருளு முடையாய், மறைக்கொடியே!

8. முல்லைப் புறவின் முளரிக்கண் மாயவன் மோகந்தவிர்
முல்லைச் சிறு மொட்டனைய முகிழ்நகைக் கோமளமே!
கல்லைப் பதித்த கனங்குழை யோடெக்கா லந்தனிலும்
மல்லைத் தருகண் ணிணையாய்! மணியே! மறைக்கொடியே!

9. வேதக் கொழுந்தே! விரையார் துளவன் விரும்பவரும்
ஏதமில் கட்ட மூகியின் கனிவா யிளங்குயிலே!
பாதகத் தேன்புன் பிறப்பேன் பழியேன், பணியறியேன்
மாதரைத் தாயே! யடைந்தேன் அருள்செய், மறைக்கொடியே!

10. நாரணன் மார்வத்தும் நாட்பூத்த பூமேலும் நான்காகுமவ்
வாரணத் தின்முடி மேலு மடியாரு ளம்புயத்தும்
பேரணி யாய்விளங் கும்பெண் மயிலே! பிறவியிது
மாறுங்கால் வந்தடி தந்தா ளெனக்கு மறைக்கொடியே!

11. மணியே! மணிக்கொம் பனையாய்! அடியேன் மனஞ்சேர்சிந்தா
மணியே! மணமுத்தி ஞர முடையாய்! மடப்பிடியே!
பிணியே நிறைந்தவிம் மெய்யே பெயருங்கால் பேரருளால்
மணவா ளனுடன் வருவாய் அரிய மறைக்கொடியே!

12. பொன்னே! புதுமலர்த் தேனே! புவியளந் தான்முந்நூலாம்
மின்னே தவழும் வரைபுரை மார்பின் விளங்கிடுவாய்!
கொன்னே யடியேன் குவலயத் துன்பத் தயராவண்ணம்
மன்னே யருள்செய் மரகதக் கிள்ளாய்! மறைக்கொடியே!

13. கிஞ்சுக வாய்மொழி யஞ்சுகமே! பொற்கிரியும் நாண
விஞ்சிடுஞ் செல்வ மளிப்பாய்; அடியார்க்கிம் மேதினிமேல்
துஞ்சவ ருங்காலந் தோன்றுத் துணையாய்த் துணைசெய்வாயே;
மஞ்சுநி கர்க்கூந்தல் மானே! மயிலே! மறைக்கொடியே!

14. வாசக் கமலப் பெரும்பதி வாழனம், வார்செவியில்
ஊசற் குழையுடன் சென்று பிணங்கு மொளிர்கயற்கண்;
நாசத் துழன்று நமன்றமர் பற்றுது நானுய்யத்தான்
வாசக் கமலப் பதந்தந்தாள்; துங்க மறைக்கொடியே!

15. நீருண்டு செல்லு நெடுங்கொண் டலைப்புரை நீள்குழலாய்!
சீருண்ட செங்கண் மதிமுகத்தாய்! விண் செறிந்தபுகழ்ப்
பேருண்ட பெண்பாவாய்! வாசக் கமலப் பெரும்பதியாய்!
பாருண்ட மாயன் மனையாம்பெண் மானே! மறைக்கொடியே!

16. சிதையா முளரித் திருமா ளிகையிற் சிறந்ததென்றென்
னிதையா ரவிந்தத் தினிதிருப் பாய்!இவ் விருண்ஞாலத்துப்
புதையா வருந்திக் கிடந்தே னையுமோர் பொருளாக்கொண்டாய்
மதுவார் குழலாய்! அருளார் கலியே! மறைக்கொடியே!

17. கிளையோடு வண்டு குடிகொண்டு நாளுங் கிளர்செந்தேனைத்
தளையூதி யுண்ணுந் திருமலர் வாழுந் தளிர்க்கொம்பன்னாய்!
இளையாவெங் காலன்கைப் பாசத் தகப்பட் டிறவாவண்ணம்
வளையாடுங் கையாய்! அருளாய்! எனக்கு மறைக்கொடியே!

18. அழலார் விழியர் நமன்றமர் பொல்லர் அறவே துன்பம்
இழையா வருமந்நா ளுன்னை நினைப்பரி தாலீர்ங்கோதாய்!
குழலார் கரத்த னகல முறைவாய்! குளிர்முகத்தாய்!
மழையார் குழலாய்! அடைந்தே னிதுநான் மறைக்கொடியே!

19. வினைக்கடல் வாய்ப்பட் டழுந்துகின் றேற்கோ விரையெடுத்த
நனைத்தெரி யல்சூடும் நங்கையர் தம்மின் நலமுறுவாய்!
சினைத்தரு விற்குயில் கூவுந் திருவல்லிக் கேணியல்லி
மனைக்கிழத் தி!யுன் பதமரு ளாயோ! மறைக்கொடியே!

20. மேவுமோ ரூழெனும் வெங்க்ரவின்வாய் விழுந்திங் கென்றன்
ஆவியே போக வலமந்து நாளும் அரற்றிநிற்கும்
பாவியேன் கண்காண வாராய் கொல்சற்றே பரிவுகொண்டு?
மேவியே வேழமுன் காத்தவன் றேவி! மறைக்கொடியே!

21. உலகு முலகி லுயிருந் தரமுன் னொருமலர்மேல்
குலவுந் திசைமா முகனைப் படைத்தாய்; குறிக்கொளவுன்
மலரின் திருநோக் கருளை விடுத்தாய்; மறலியையும்
மலரில் உறைவாய்! மடிக்க வளித்தாய்; மறைக்கொடியே!

22. ஆழிவாய்ப் பட்டுக் கரைதனைக் காணு தலமருமோர்
ஏழையாம் புள்ளின் இறகுமொ டிந்தா லெனப்பிறவி
யாழியின் வாயினில் ஞான மழிந்தே யழிவேனுக்கு
மாழையொண் னோக்கி!நீ யேசரண் கண்டாய்! மறைக்கொடியே!

23. ஒருவல்லிக் கொம்பன்ன யுன்பெய ரோத வுலகிலென்வாய்
அரு*நல்லிக் குத்தின்று லொத்துநீ ரூறும்; அரியமறை
தருநல்லப் பண்கேட்டா லொக்கும் புகழே தளர்செவிக்கு;
மருவல்லிக் கேணி வருவாய்! மயிலே! மறைக்கொடியே!

24. மன்னு மறைநான்கும் மாசறக் கற்ற மதியுடையான்
துன்னு புரிநூல் அகலத்தன் றூய்மை நிறைந்தநெஞ்சன்
முன்னு தவத்தன் பிருகு முனிவன் முதிர்தவத்தால்
மன்னு குமுத மடுவிற் பிறந்தாய், மறைக்கொடியே!

25. உத்திர நாள்வரு மொண்ணுதற் காரிகை! யொண்டுளபச்
சித்திர மாலை புனையுமன் னுதன் திருத்துணைவி!
இத்தரை மீதினி லேது மறியா திருந்திடுமுன்
மத்தனை யாட்கொண்ட வாறருட் பாவை மறைக்கொடியே!

26. உன்பெய ரோர்கால் மொழிவார்க்கிஞ் ஞாலத்தி லோதிடுங்கால்
மன்னு புகழுந் திருவும் பொருளும் மதிப்பும்வாழ்வும்
இன்ன முளயாவும் வீந்தபின் வீடு மியலுமெனின்
மன்னுமுன் னுமத்தின் சீர்மை பெரிதாம் மறைக்கொடியே!

27. என்னுள மேவி யுறைகின்ற வீர்ங்கோதாய்! இஞ்ஞாலத்தில்
உன்னரு ளால்யான் படைத்த விருகண்ணு முன்னைக்காணும்,
பன்னுமென் வாயுமுன் னுயிர நாமங்கள் பற்பொழுதும்,
மன்னிய வுன்புக ழுண்ணுஞ் செவியும், மறைக்கொடியே!

28. சீதப் புனலார் செழுமலர் மேலுறை செல்வி!கங்கை
பாதத் தொருநாள் பயந்தான் மகிழும் பசுங்கிளியே!
†போதத் திருவருள் செய்யுங் கருணைப் பொலங்கொடியே!
மாதர்க் கரசி! மகவுக் களிப்பாய்; மறைக்கொடியே!

29. வலியுடைச் சீயம் பசித்துக் கனன்று வருகின்றவன்
மலைபுரை வேழ மடித்துப் புசித்து வளர்கானில்முன்
தலைவனு டன்சென்று ஞாலத் துயரைத் தணிவிக்குமுன்
மலர்புரை தாளென் தலைவைப்ப தெந்நாள்? மறைக்கொடியே!

30. வாழிய மேதினி, வாழிய செந்தமிழ், வாழியநூல்,
வாழிய மன்னவர், வாழிய வாநிரை, வாழியபால்
ஆழியன் பாதத் தடியவர், வாழிய அம்புயமே,
வாழிய நாளும், அறமே தழைக்க மறைக்கொடியே!

சுபம்.

---

* அரு நல் இக்கு: இக்கு-கரும்பு.
†போதம்—ஞானம்.

# திருவல்லிக்கேணிப் பெருமான் பொன்னூசல்

T. S. ராஜகோபாலன், B.A., L.T.,

(கவிரத்ந-கண்டீரவ, செஞ்சொற்கவி, அபிநவ பட்டர்பிரான்)

1. தேவகிப் பிராட்டியார் திருவயிற்றில் வந்தருளியமை

மாதவனூர் வாழிடமாய்ப் புவனந் தன்னுள்
வானணவும் மாமாட மதுரை நாடி
ஓதரிய மாபுகழாள் ஓங்குஞ் செல்வி
உதரத்தில் உதித்தருளும் உம்பர் கோவே!
ஆதவன்றன் கதிர்நாடாச் செறிதண் சோலை
அணைகொள்ளுந் திருவல்லிக் கேணி தன்னில்
ஏதமிலா அடியவர்கள் இறைஞ்சி யாட
எம்பெருமான்! கமலையுடன் ஆடி ரூசல்.

2. தாய்தந்தையரது தளைகழலச் சிறையில் தோன்றியமை

அருள்கொண்டு பெய்கலன்கள் அயுதம் பூப்ப
அங்கையிற் சங்காழி தண்டுந் தாங்கித்
இருள்மண்டு சிறைதன்னிற் சோதி சூழ
ஈன்றவர்தம் தளைகழலத் தோன்றி னீரால்
தெருள்கொண்ட செம்மனத்தார் மல்குஞ் செல்வம்
சேரோங்குந் திருவல்லிக் கேணி தன்னில்
அருள்மண்டு நயனத்தாள் அன்பின் தேறல்
அணிசெய்யும் அகலத்தீர்! ஆடி ரூசல்.

3. திருவாய்ப்பாடிக்கு எழுந்தருளியமை

அலைகொண்டு நுரையணியும் யமுனை வேணி
அதர்காட்ட விரைதந்த ஐயர் கையில்
அலைகொண்ட நெடுந்தடத்த நளினந் தன்னுள்
அன்னத்தின் பார்ப்பெனவே அடங்கி னீரால்
அலைகொண்ட செம்பவளம் கூலஞ் சேரும்
அணிவேலைத் திருவல்லிக் கேணி தன்னில்
அலைகொண்ட ஆழியென அடியார் நாடும்
அரவிந்தக் கழலிணையீர்! ஆடி ரூசல்.

4. **ஆய்ச்சியர் குழந்தையைக் காண விரைந்தமை**

மின்னன்ன நுண்ணிடையார் குழைக ளாட
விரைமலர்சேர் குழலாட இழைக ளாடப்
பொன்னன்ன துகில்பாய நும்மை நாடப்
பொற்கொடியாள் மடிதன்னிற் பொலிந்த சோதி!
மின்னன்ன தீபநிரை மிளிரும் வீதி
விண்காட்டுந் திருவல்லிக் கேணி தன்னில்
பொன்னன்ன மெல்லாடை அரையில் தாங்கிப்
பொன்னூர்ந்த பலகையிலே ஆடி ரூசல்.

5. **யசோதைப் பிராட்டியின் மகிழ்ச்சி**

புடைசூழ்ந்து தொழுதேத்தும் உம்பர் காணு
வளரின்பப் புனலாழி ஆழ்ந்த அன்னை
புடைசாருங் கருங்குழலும் பரந்த கண்ணும்
புன்னகையும் கதிர்முகமும் காண வந்தீர்!
அடையாரும் அரவிந்தம் மலிதண் வாவி
அணிநல்குந் திருவல்லிக் கேணி தன்னில்
தொடையேறு நறுமலரின் தேறல் பாயத்
துளவத்தார் விரைசூழ ஆடி ரூசல்.

6. **ஆய்ச்சியர் குழந்தையைத் தம்மடியில் இருத்தி மகிழ்தல்**

வாய்ந்தவருந் தேன்மொழியார் நும்மைத் தந்தம்
மடிகொண்டு குலவுதற்கு வாவா என்னப்
பாய்ந்தவர்தங் கரந்தோய்ந்தீர், முறுவல் பூப்பப்
பாவையரும் உய்ந்தனமென் றுவகை கொண்டார்
வேய்ந்தவுயர் நிரைப்பந்தர் வீதி யெங்கும்
வெயில்மறைக்குந் திருவல்லிக் கேணி வந்தீர்!
ஆய்ந்தபுகர் மணியார்ந்த உதர பந்தம்
அமுதனையீர்! வில்சொரிய ஆடி ரூசல்.

7. **பூதனை, சகடாசுரன் முதலோர் மாய்ந்தமை**

வஞ்சனையே வளருள்ளக் கஞ்ச னேவ
வந்தவள்தன் முலையுண்டு, சகடந் தன்னைப்
பஞ்சனைய மெல்லடியால் முனிந்து சாடிப்
பரந்துற்ற கடுங்காலும் காய்ந்தீர், இன்று
செஞ்சொல்லார் மொழிபயிலுஞ் செவ்வாய்க் கிள்ளை
சேர்சோலைத் திருவல்லிக் கேணி தன்னில்
கொஞ்சுமொழி மின்னிடையாள் மயிலின் சாயற்
கோமகள்நும் வலமமர ஆடி ரூசல்.

8. கர்க்க முனிவர் திருநாமம் (பெயர்) சூட்டியமை

முக்காலம் அறிந்துயர்ந்த முனிவன் நுந்தம்
 மேனியிலே மணிநிறமும் மண்ணோர் வாழ
எக்காலும் பிறந்திடுநும் பரிவும் நோக்கி
 இறையாவீர் கண்ணனென்றே ஏத்த வந்தீர்
எக்காலும் மின்புல்கும் மங்குல் தாழ
 எழிலோங்குந் திருவல்லிக் கேணி தன்னில்
மிக்கார்ந்த வெய்யோன்றன் அன்பன் செல்வி
 மென்குயில்நும் இடமமர ஆடி ரூசல்.

9. தவழ்ந்து விளையாடியமை

காராரும் மென்குழல்மேற் பீலி ஆடக்
 கரம்பெய்த பொன்வளைகள் சிலம்பி ஆடத்
தாராரும் நவமணிகள் வில்லிட் டாடத்
 தவழ்ந்திட்டீர் பாடியர்தம் உள்ள மாட
ஏராரும் மாடமிசை எழிலி ஆட
 இருள்சோலைத் திருவல்லிக் கேணி தன்னில்
சீராரும் மலர்க்கையால் அபயங் காட்டித்
 தேரூர்ந்த தெள்ளமுதே! ஆடி ரூசல்.

10. ஓடி விளையாடியமை

களிகொண்ட கோவலர்தம் மகளிர் நுந்தம்
 கணங்கொண்ட மாமுகிலின் சோதி தன்னை
ஒளிகொண்ட நயனத்தால் அள்ளி மாந்த
 ஓடிமிகத் திளைத்திட்டீர் பாடி யெங்கும்
அளிகொண்ட மலரணவுந் தென்றல் தோயும்
 அணிமாடத் திருவல்லிக் கேணி வந்தீர்!
ஒளிகொண்ட பொன்னாழி ஒப்பில் சங்கம்
 ஒண்கதையும் இலங்கிடவே ஆடி ரூசல்.

11. வெண்ணெய்க் களவு

துஞ்சாத மாமுனிவர் வானிற் கூடித்
 தூமறையால் நும்புகழ்கள் பாடி ஆட
அஞ்சாமல் இளங்கன்றாய்த் துள்ளி யெங்கும்
 அல்குழலார் அளைவெண்ணெய் களவி லுண்டீர்
மஞ்சாரும் நீள்சோலை மஞ்ஞை ஆட
 வண்டறையுந் திருவல்லிக் கேணி தன்னில்
செஞ்சாந்தங் கமழ்மார்பில் கலன்க ளாடச்
 செம்பவளம் திரள்வாயீர்! ஆடி ரூசல்.

12. மண்ணுண்ட வாயை ஆந்து காட்டியமை

மண்ணுண்டாய் எனச்சீறும் அன்னை காண
வணங்கொண்ட செளிவாயை ஆந்து காட்ட
விண்கொண்ட சோதிதனை அதனுட் கண்டு
வியன்ஞால முதலாவீர் என்று நின்றுள்
பண்கொண்ட உயர்கானம் மாடந் தோறும்
பரவவுயர் திருவல்லிக் கேணி வந்தீர்!
கண்கொண்ட அருளாலே நோக்கி என்றன்
கடுவினைகள் காய்தகையீர்! ஆடி ரூசல்,

13. உரலில் ஆப்புண்டமை

இருவினையால் இந்நிலத்தில் என்று மோவாது
இடருற்றுர் ஆப்பவிழ்க்கும் கருணை வள்ளால்!
திருவனையாள் குறுங்கயிற்ருல் உரலி லார்க்கத்
திகைநெடுங்கண் நீர்சோரச் சோர்ந்து நின்றீர்
அருமறையால் அந்தணர்தம் மனத்து ளார்த்தே
அடிபணியுந் திருவல்லிக் கேணி தன்னில்
பொருமுனையில் வேலோச்சும் தொண்டை வேந்தன்
பொன்னகத்தே ஆப்புண்டீர்! ஆடி ரூசல்.

14, இணைமருதம் சாய்த்தமை

பிணைத்திட்ட குறுந்தாம்பு வயிற்றி லார்ப்பப்
பெருவுரலும் பின்னுருளத் தவழ்ந்து விம்மிப்
பணைத்திட்ட இணைமருதம் சாய்த்து, வீணைப்
பண்ணிசையான் இட்டபெரும் சாபந் தீர்த்தீர்
பணைத்திட்ட மறையோடு கலைகள் வல்லார்
பரவுபுகழ்த் திருவல்லிக் கேணி தன்னில்
அணைத்திட்ட வாளரவின் அகடு சாய்ந்தீர்!
அடியவர்தம் ஆருயிரீர்! ஆடி ரூசல்.

15. காளியனை அடக்கியமை அசுரர்களை மாய்த்தமை

ஐந்தலைய விடநாகம் காய்ந்து, கானில்
அழல்வாய மாசுணமுங் கீண்டு, சீறி
வந்தெதிர்ந்த வயமாவுங் கன்று மின்ன
மாய்த்திட்டுக் கோவலர்தம் நடுக்கம் தீர்த்தீர்
சந்தமிகு தமிழோசை அமிழ்தி ஞேங்கித்
திசைநிரப்புந் திருவல்லிக் கேணி தன்னில்
செந்தமிழன் அணிமயிலைத் தேசன் போற்றுந்
திருமார்வர்! யாங்காண ஆடி ரூசல்.

**16. குன்றைக் குடையாகக் கவித்தமை**

முறையொழித்த திறலாயர் அட்ட தெல்லாம்
முன்னின்று மலையுருவாய் முற்றுந் துய்த்து
வரையெடுத்து, வானவர்கோன் மதமுந் தீர்ந்து
வானுய மூவெழுத்தால் வாழ்த்த நின்றீர்!
மறையெடுத்த மந்திரத்தால் நாளு மேத்தும்
மானவர்சேர் திருவல்லிக் கேணி தன்னில்
நிறைவளத்த மழிசையர்தம் நாத னேத்த
நிலைகொண்ட நாகணையீர்! ஆடி ரூசல்.

**17. பிரமனது கர்வபங்கம்**

கற்றுவும் மழவிடையும் மேய்த்துக் கானில்
கனியுதிர்த்துப் பகைதடுத்துப் பிரமன் வெள்கக்
கற்றுவும் பாலருமாய்த் திகழ்ந்து நின்று
கள்ளங்கொள் அசுரர்கள் வீயச் செற்றீர்
வற்றாத களிவெள்ளம் எங்கும் பாய
வங்கஞ்சூழ் திருவல்லிக் கேணி தன்னில்
வற்றாத வான்மொழியாற் கலியன் போற்றும்
வானேங்கு மணிமுடியீர்! ஆடி ரூசல்.

**18. குரவை கோத்தமை**

பனிக்கதிரோன் பாரெல்லாம் குளிர நோக்கப்
படர்ந்தோங்கு பூங்கொடிகள் கவரி வீச
இனித்திருந்து குழலூதி எல்லிப் போதில்
இளங்குயிலார் உளங்குளிரக் குரவை கோத்தீர்
பனித்திரைகள் வளங்கொழிக்கும் வேலை சேரும்
படியோங்குந் திருவல்லிக் கேணி தன்னில்
முனித்தலைவன் அறஞ்செழிக்க மகிழ்ந்த வேந்தே!
மூவாத முழுமுதலே! ஆடி ரூசல்.

**19. ஆய்ச்சியர்க்கு மெய்ஞ்ஞானம் நல்கியமை**

செங்கமலச் செழுந்தடத்தின் மலர்கள் தோறும்
சேர்ந்தூதும் அளிநிரைபோல் சோலை தன்னுள்
கங்குலிடைக் கன்னியர்கள் தம்மோ டாடிக்
களித்துகந்து மெய்ஞ்ஞானம் நல்கி னீரால்
மங்குலிடை மின்னேறி மேலாம் மாத
ரிடைகாட்டுந் திருவல்லிக் கேணி தன்னில்
கொங்குமலி மென்குழலாள் கோதை ஏத்தக்
குழலூதுங் குருமணியே! ஆடி ரூசல்.

20. மாமன்றிற் குடக்கூத்து

பறைகொண்டு கோவலர்கள் கடலி னுர்ப்பப்
பாவையர் நும் மருஞ்சரிதை பாடி யாட
மறைகொண்டு மாமுனிவர் அணுகி ஏத்த
மாமன்றிற் குடமாடி வேர்த்து நின்றீர்
சிறைவண்டு மலரூதத் தேறல் பாயுஞ்
செழுஞ்சோலைத் திருவல்லிக் கேணி தன்னில்
முறைகொண்டு நாவலர்கள் இறைஞ்சி ஆட
மும்மதத்த வாரணமே! ஆடி ரூசல்.

21. மதுரை சேர்ந்தமை

இணையில்லாப் போராயர் கொம்புக் காகி
ஏழ்விடையின் கொம்பொசித்து மதுரை நாடிப்
பணைமுலையாள் கூனிமிர்த்து மாலா காரர்
பணிந்தளித்த நன்மாலை மார்பி லேற்றீர்
துணையில்லாத் தொன்மறைநூல் ஓதும் நாவர்
தொழுதேத்துந் திருவல்லிக் கேணி தன்னில்
கணையொன்றால் வானரத்தின் கம்பந் தீர்த்துக்
கலிவீய நின்றிட்டீர்! ஆடி ரூசல்.

22. கஞ்சனைக் கொன்றமை

மன்றூரும் மெல்லியலார் நும்மைக் கண்டு
மல்லருடன் போருக்கோ நீரென் றஞ்சக்
குன்றூத மதக்களிறும் மல்லுஞ் செற்றுக்
குரைகழலான் கஞ்சனையுங் காய்ந்து கந்தீர்
குன்றூத பத்தியினர் சொல்லைப் புள்ளும்
குழறுஞ்சேர்த் திருவல்லிக் கேணி தன்னில்
என்றேனுங் காண்பார்தம் இடருந் தீர
இரங்கிமிக நின்றிட்டீர்! ஆடி ரூசல்.

23. ருக்குமணிப் பிராட்டியாரை மணந்தமை

வண்டமரும் மலர்க்குழலாள் மன்னன் பாவை
மறையவன்வாய்த் தன்னிலையைப் பகரக் கேட்டுத்
திண்டிறலான் சிசுபாலன் திகைத்து நிற்பத்
தேரூர்ந்து பொற்கொடியை அணைந்து கந்தீர்
வண்டறையும் பொழில்தாழும் தேவ ரன்பால்
வாழ்த்துஞ்சேர்த் திருவல்லிக் கேணி தன்னில்
கண்டவர்தம் மனங்கவருஞ் சோதி கொண்டீர்!
கனங்குழைகள் ஒளிசிதற ஆடி ரூசல்.

24. துவாரகை சேர்ந்தமை

திரைதோறும் நித்திலமும் மணியுங் கொண்டு
திளைத்தெழுந்த கடலரையன் அன்பா லீந்த
வரையோங்கு மாமாடத் துவரை தன்னுள்
மண்ணெல்லாங் கழல்பணிய மகிழ்ந் துறைந்தீர்
விரையேறு மாதவியின் பந்தர் நீழல்
வீமறையுந் திருவல்லிக் கேணி தன்னில்
வரையாது மில்லாமல் மண்ணோர் வாழ்த்த
மன்னிவளர் கார்முகிலே! ஆடி ரூசல்.

25. தேரூர்ந்தமை

நுந்துணையே துணையாக நாடி, என்றும்
நும்மைத்தம் புகலாகக் கொண்ட ஐவர்
தந்துணைவி குழல்முடிக்க, அமரில் துன்னும்
தார்மன்னன் படைநடுவே தேரி லூர்ந்தீர்
உந்துபுனல் துளிதூவச் செழித்த பூகம்
உம்பர்தோய் திருவல்லிக் கேணி தன்னில்
அந்தமிலா ஆரணத்தின் உயிரே யாகி
அமுதாகி நின்றருளிர்வீர்! ஆடி ரூசல்.

26. மற்றை நிலைகள்

வெள்ளத்தின் திரைமோதப் பாந்தள் சாய்ந்தீர்
வேழத்தின் இடர்தீரப் புள்ளை ஊர்ந்தீர்
பிள்ளைக்காப் பொன்பெயரோன் ஆகங் கீண்டீர்
பெய்வளையாள் பாவைக்காப் பரவை காய்ந்தீர்
அள்ளல்வாய் சங்கீன்ற முத்த மெங்கும்
அதரொளிக்குந் திருவல்லிக் கேணி வந்தென்
உள்ளத்தே உறைவீரின்(று) ஆடி ரூசல்
உலகுய்ய மலர்மகளோ(டு) ஆடி ரூசல்.

27. பிறப்பிறப்பு நீங்கும் வகை

கடியார்ந்த மலர்ச்சோலை மதுரை தோன்றிக்
கனமதிள்சூழ் கண்ணபுரம் மேவி மன்னும்
நெடியோற்கே ஏழ்படிகால் அடிமை நேர்ந்து
நெகிழாத நெறியுடையார் மரபி லுற்றேன்
படியார்ந்த பெரும்புகழாற்(கு) அறநூ லன்று
பகர்ந்ததகைத் திருவல்லிக் கேணி யான்றன்
அடிசூடி ஆர்வத்தால் பாடி வியப்பன்
அகலிடத்தே பிறப்பிறப்பால் ஆடு மூசல்.

———

# திருவல்லிக்கேணி அறுபது

நா. ஆதிகேசவன்
(மாநில அரசு விருதுபெற்று) ஓய்வுபெற்ற ஆசிரியர், நல்லாண்பிள்ளைபெற்றாள், 604152

[நேரிசை வெண்பா]

### இறை வாழ்த்து

வையம் தகளியென வாழ்த்தெடுத்த பொய்கையெம்
ஐயன் கழல்பணிந்து ஆர்வமொடு—செய்யுள்
அடியேன் செயமுனைந்தேன் அன்றுலகம் மூன்றே
அடியால் அளந்தானை ஆய்ந்து.

### தமிழ்த்தாய் வாழ்த்து

கன்னித் தமிழ்த்தாயைக் காலத்தால் மூப்பில்லாப்
பொன்னியல் நல்லாளைப் போற்றினேன்—மன்னிய
தோற்றமும் கேடும் தொடராப் பரம்பொருளை
ஏற்றமுடன் பாட இசைந்து.



### ஆதிகுரு வணக்கம்

வேதம் விரித்தநா வீறன் திருக்குருகை
நாதன் சடகோபன் நன்மாறன்—பாதமாம்
பொன்முடியைச் சூடினேன் பூவல்லிக் கேணியுறை
பொன்னடியைப் போற்றப் புகழ்ந்து.

### ஞானசான் வணக்கம்

எந்தையாய்த் தாயாய் எவர்க்கும்நல் ஆசானாய்
முந்தையாய் ஞான முதற்பொருளாய்—வந்திப்பேன்
கோவலூர் எம்பெயர் கோமான் திருவடிக்கே
ஏவல்செய் தென்றும் இனிது.

### ஆசான் வணக்கம்

எந்தையாய்த் தாயாய் எவர்க்கும்நல் ஆசானாய்
முந்தையாய் வான முதல்வனாய்—வந்திப்பேன்
உள்ளத்தால் தூய உயர்குப்பு ரெட்டியரை
உள்ளத்தான் நன்றி உணர்ந்து.

### வேத அத்யாபகக் குழு வணக்கம்

சீர்த்திமிகு கீதாசான் செய்ய திருவடியை
ஆர்த்தியொடு பாடவே அஞ்சலித்தேன்—கூர்த்தமதி
வேதஅத் யாபக வேள்விபுரி அந்தணர்தம்
பாதங்கள் யாமுடைய பற்று.

### அவையடக்கம்

புல்லறிவன் பேதையேன் புன்கவிகள் தன்னையே
வல்லறிவு மேதையர் வாழ்த்தாரோ?—எல்லையில்
இன்பொழுகும் தன்சேய் இயம்பும் குதலையென
அன்புமிகக் கொண்டே அணைத்து.

### நூல்

1. பூவுலகும் வானும் புனலும்செந் தீவளியும்
நாவுலவும் செந்தமிழும் நான்மறையும்—யாவுயிரும்
உண்பொருளு மாகி உயரல்லிக் கேணிவாழ்
ஒண்பொருளை உள்ளமே ஓர்.

2. போராளும் பார்த்தனுக்குப் புத்துணர்வைத் தானளித்த
தேராளன் மாயத் திருமாலாம்—சீராளன்
விண்ணதிர்ந்து பெய்யும் விரையல்லிக் கேணியுளான்
கண்ணமர்ந்து தாள்தொழலே காப்பு.

3. பூமருவும் நல்யமுனைப் பொங்கரிலே புண்ணியஞ்சேர்
ஆமருவி தான்மேய்த்த அண்ணலை—நாமருவி
வாழப் பிறந்தவன் வாழல்லிக் கேணிசென்று
தாழ வணங்கல் தலை.

4. முன்னைப் பழம்பொருளாய் மூவுலகும் தோற்றுவித்துப்
பின்னைப் புதுப்பொருளாய்ப் பிச்சேற்றும்—சென்னை
திருவல்லிக் கேணியுறை தேவனே எந்தன்
அருவினையை நீக்கும் அமுது.

5. மனமாசு தீர்ப்போன் மரையாள்தன் கேள்வன்
தனமாய எல்லாம் தருவோன்—புனல்மேவிக்
கண்வளரும் மாயோன் கழல்பணியச் செல்லுமினோ
பண்வளர்அல் லிக்கேணி பார்த்து.

6. நதிதோறும் மூழ்கியே நாரணன் தன்னைப்
பதிதோறும் சென்று பணியா—முதியோர்க்கு
வாய்ப்பாக நின்றான் வளரல்லிக் கேணியிலே
போய்ப்பாத சேவை புரி.

7. வையம் அளந்தானை வானவரும் மண்ணவரும்
உய்யவே பார்த்தன்தேர் ஊர்ந்தானைச்—செய்யாள்
அகத்துறையும் தேவை அடிபணிந்து உய்வேன்
செகத்துயர்அல் லிக்கேணி சென்று.

8. வேதத்தை வேதியனை வேதத்தின் உட்பொருளாம்
பாதத்தைப் போற்றிப் பணிவார்தம்—ஏதத்தைத்
தீயினிற்சேர் தூசாக்கும் திண்ணல்லிக் கேணிநகர்
நீயினிச்சேர் நெஞ்சே நினைந்து.

9. பொல்லாத தென்னிலங்கை போயழித்த தாசரதி
வில்லாளன் சென்றேவிழைந்துறையும்—நல்லார்
தமிழ்வேதம் ஓதுகின்ற தண்ணல்லிக் கேணி
அமிழ்தேயாம் நெஞ்சே அறி.

10. கூறும் பழிபாவம் கூடா பதுமமலர்
நாறுமல்லிக் கேணியுறை நாதன்பேர்—ஆறெழுத்தோ
டீரெழுத்தும் ஓதுமவர் இன்பமுடன் தாம்வாழ்வார்
நேரவர்க்கிங் குண்டோ நிகழ்த்து.



11. அருமறையும் காணு அழகனை நெஞ்சே!
கருமுகில்நேர் வண்ணக் கனியை—ஒருமனதாய்
நாரணனை வாழ்த்த நயந்தல்லிக் கேணிசெல்
பூரணமாய் வாழ்வாய் பொலிந்து.

12. குமுதமலர்ப் பாதன் குடமாடுங் கூத்தன்
அமுதம் கடல்கடைந்த அன்று—சுமுகமாய்த்
தேவர் பெறவளித்த தேசல்லிக் கேணியனைக்
கோவர் குலக்கொழுந்தைக் கூறு.

13. முன்னை வினைதேய்ப்போன் முத்தொழிலும் செய்துயர்வோன்
சென்னையல் லிக்கேணி சென்றமர்வோன்—மன்னும்
மணியோன் மரகதத்தோன் மாலோன்றன் பாதம்
பணியாதார்க் கில்லை பயன்.

14. தரங்கம் புகழ்பாடும் தாதல்லிக் கேணி
அரங்கா!நின் தாள்பணிவேன் ஆகம்—சுரங்கநீர்
ஒத்துருகிப் பாடுதலால் ஓகைசேர் போக்கியத்தை
நத்துமெனக் கீவாய் நயந்து.

15. மருத்துவனு மாகி மருந்துந்தா ளுகி
வருத்தும் பிணிநீக்க வந்தே—திருத்தமாய்க்
கீதையைச் சொல்லல்லிக் கேணியன்தான் காட்டுவித்த
பாதையை நெஞ்சேநீ பற்று.

16. போரானைக் கொம்பொசித்துப் புள்ளூரும் அம்மானைச்
சீரானை நாரணனைச் சிந்தியார்க்—கோரானை
வண்ணக் கரியானை வானல்லிக் கேணியனை
எண்ணக் கெடுமே இடர்,

17. மக்களொடு சுற்றம் மனையோடும் வாழலாம்
தக்கசீர்ச் சான்றோர்கள் தாம்மகிழ—எக்காலும்
தேன்பாயும் சோலைத் திருவல்லிக் கேணியமர்
வான்மாயன் தாளை வணங்கு.

18. தூதனுய்ச் சென்று துரியோ தனன்வகுத்த
சூதறையின் மீதிருந்து சூதறியும்—மாதவனை
ஆயிரம் பேருருவன் ஆரல்லிக் கேணியனை
ஆயிரம்பேர் சொல்லி அழை.

19. அரியெங்கே என்றதட்டும் அப்பனுக்கு மைந்தன்
அரியிங்கே என்றுசொல ஆங்கே—அரியுருவாய்
அந்தியிலே வந்தவுணன் ஆகம் பிளந்தவனைச்
சிந்தியல்லிக் கேணி செறிந்து.

20. ஆழ்வார்கள் காட்டும் அருளிச் செயலோதி
தாழ்வான யாவுமே தாம்விட்டு—வாழ்வார்கள்
வாழுமல்லிக் கேணி வரதனை நெஞ்சேநீ
சூழுவாய் நாளும் சுகித்து.

21. செந் மிழ் வேதம்வாழ் சீரல்லிக் கேணியிலே
அந்தமில் இன்பம் அருள்செய்வான்—வந்தமர்ந்த
வாரணத்தைக் கொன்ற வடமதுரைக் கோளரியாம்
நாரணனை நாளும் நவில்.

22. பழுதிலா நல்லன்பர் பல்லார்தம் பாதம்
தொழுதெழுவார் துன்பமெலாம் தூசாம்—கெழுமிய
தூமணி வண்ணனும் தூயல்லிக் கேணியன்தாள்
தாமணியும் தொண்டரடி தாழ்.

23. நாத்திகமே பேசும்யான் நல்லாரைக் கூடியபின்
ஆத்திகமே பேசுகின்ற அந்நலமே—ஆத்திரேயர்
போற்றல்லிக் கேணி புகுந்தே அடைந்தேனல்
நாற்றமலர் சேர்ந்தன்ன நார்.

24. மண்ணில் பிறந்தவர்மேன் மக்களாய் வாழ்வதற்கு
எண்ணில் தவநெறிதான் ஏதென்னில்—புண்ணியம்
மிக்கல்லிக் கேணி மிளிர்வான்தன் பாதமலர்
நெக்குருகி வாழ்த்துதலே நேர்.

25. பேயார் பிறந்தபதி பேச்சிமுலை யூடுயிரை
வாயால் அமுதுசெய் வள்ளலூர்—சேயாய்
ஒருத்திபால் தோன்றி ஒருத்திபால் வந்தோன்
திருத்தலமல் லிக்கேணி தேர்.

26. மன்னும் மறைநான்கும் மாறன்சீர் வாய்மொழியும்
பன்னும் பதியல்லிக் கேணிநகர்—என்னும்
தலத்தமர்ந்த தேவைத் தரிசித்தோர் நாமம்
சொலத்தளர்ந்து போமே துயர்.

27. சென்றே பணிவேன்யான் செய்யாள்தன் கேள்வனை
அன்றிவ் வுலகளந்த ஆயனை—இன்றே
திருவல்லிக் கேணி திகழ்வானைத் தேனும்
திருவாய் மொழியோதித் தேர்ந்து.

28. ஞான மனுட்டானம் நற்கலைகள் தானறியா
ஈனத் தவரும்தாம் ஏத்துவரேல்—ஊனக்
கருவெடுக்க வொண்ணுக் கதிபெறுவர் இன்னே
திருவல்லிக் கேணிதொழத் தேறு.

29. துயமும் சுலோகமும் தூயவெழுத் தெட்டும்
நயமுடைய ஆசானை நாடி—உயவே
பொறியொற்றிக் கொண்டதன்பின் போயல்லிக் கேணி
நெறியொற்றி வாழ்த்த நினை.

30. மன்னிக்க ஆகாத மாபெரும் பாவியுந்தன்
சென்னிதனைத் தாழ்த்திநர சிங்கனே!—என்னினவன்
ஆயபிழை அத்தனையும் அன்றே அழிப்பவன்வாழ்
தூயல்லிக் கேணி தொழு.

31. தம்பி குகனென்று தானுணர்த்தி வாழ்வளித்த
நம்பி யுகக்குமிடம் நானறிவேன்—பம்பிவளர்
தாழை மணங்கமழும் தாதல்லிக் கேணியுளான்
கோழை குறுகாமுன் கூறு.

32. ஊழ்வாதை அற்றொழியும் உம்பருல கின்மேலாம்
வாழ்வாம் நிலைபெறலாம் வம்மினோ—ஆழ்வார்
அருளிச் செயல்நூலை அன்றூடம் சேவி
திருவல்லிக் கேணியே சென்று.

33. கொள்ளைக் கனியுண்டு கூடுதனில் பார்ப்புறங்கப்
பிள்ளைக் குயில்க ளிசைபாடக்—கிள்ளைகள்
செந்தமிழ் வேதம்சொல் செவ்வல்லிக் கேணியனை
வந்தனைசெய் கொள்வாய் வளம்.

34. வானகத்து வேந்தனால் வாழ்விழந்து சாபங்கொள்
கானகத்துக் கல்தான் கழல்கதுவ—மானமிகும்
பெண்ணா னதுகேட்டும் பேரல்லிக் கேணியனை
எண்ணாது போக்கினைநாள் ஏன்?

35. மச்சமாய் ஆமையாய் மாணியாய்க் கற்கியாய்ப்
பச்சைநிற வண்ணனாய்ப் பன்றியாய்—அச்சமுறும்
சிங்கமாய் மூவுருவில் சீராம னாய்வந்தோன்
இங்கல்லிக் கேணியுளான் ஏத்து.

36. நாள்மலரும் நற்றுளவும் நாறுதோள் நாரணன்றன்
தாள்மலரைத் தஞ்சமெனத் தாழுமவர்—தாள்கள்
பழுத்தமரம் பற்றும் பறவைபோல் பத்தர்
வழுத்தவல்லிக் கேணிவரல் வாய்ப்பு.

37. மண்முதல் பூதமாய் மானுடமாய் மற்றவையாய்
விண்முதல் வேதமொரு நான்குமாய்ப்—பண்முதல்
பாப்பலவாய் ஆனானைப் பாங்கல்லிக் கேணியனை
நாப்புலரப் பாடின் நலம்.

38. வேதமலி வித்தகர்செய் வேள்விப் புகைகமழச்
சீதமலி மேகமெனச் செஞ்சாலி—போதமுறக்
கேசவனைத் தாள்பணியும் கேழல்லிக் கேணிசேர்
மாசடையா துள்ளம் மதி.

39. நற்று மரையாளின் நாயகன் நாரணன்
கற்றுவை மேய்த்த கருங்தெய்வம்—சிற்றனையால்
சீர்மை முடிதுறந்தான் சேர்அல்லிக் கேணிசெலும்
நீர்மையை நெஞ்சே நினை.

40. மூப்புன்னைச் சேராமுன் முந்திடுவாய் ஓர்முறையே
ஆப்புன்னை சேரும் அணிசோலை—நாப்புலவர்
வேதவொலி சேரும் வியனல்லிக் கேணியுறை
மாதவனை ஏத்த மகிழ்ந்து.

41. படமாடும் பாம்பணையில் பள்ளிகொள்ளும் தேவைக்
குடமாடும் கோவிந்தக் கோனைத்—திடமாக
சீரல்லிக் கேணியிலே சென்றுபணி தொண்டருக்கே
ஆருண்டே ஒப்பென் றறை.

42. எட்டுநல மாந்திருவும் எல்லோர்தம் இல்லத்தில்
விட்டுவின்பேர் சொல்ல விழைந்துறையும்—வைட்டணவர்
வாழல்லிக் கேணியுறை வள்ளல் தனைவணங்கின்
சூழுமோ கேடுதான் சொல்.



43. குலந்தரும் செல்வமொடு கோதிலா வாழ்வின்
நலந்தரும் ஞானமொடு நாளும்—வலந்தரும்
செந்திருவை மார்பதனில் சேர்த்தமது சூதனனை
வந்தல்லிக் கேணிதனில் வாழ்த்து.

44. நித்தம் நினைந்துருகி நீதிரி விக்கிரம
உத்தமன் தன்னை உளத்தமைத்து—மெத்த
மணங்கமழும் மாடஞ்சூழ் மாணல்லிக் கேணி
வணங்குவதே நெஞ்சே வழி.

45. அன்றுமே மாவலிதன் ஆணவத்தைத் தானழிக்கச்
சென்றுமே மூவடிமண் செங்கையால்—நின்றிரந்த
வாமனனே வாழும் வளரல்லிக் கேணிக்கே
வாமனனே! மெய்ம்மை வரம்.

46. எவ்வுலகும் எவ்வுயிரும் எப்பொருளும் எல்லாமாய்
இவ்வுலகில் தோன்றும் இறைவனைச்—செவ்விய
சீரல்லிக் கேணி சிரீதரனைப் போற்றினால்
பாரதனில் வாழ்வாய் பரிந்து.

47. நொந்த மனமே! நுவலினவன் நாமத்தை
வந்து மனமிரங்கி வாழ்வளிக்கும்—கொந்தலரும்
இன்துழாய் சூடும் இருடிகே சன்தன்னை
முன்தொழுவல் லிக்கேணி முந்து.

48. தாயாகித் தந்தையுமாய்த் தாங்குகின்ற தெய்வத்தைச்
சேயாய் நமைவளர்க்கும் செங்கணனைக்—காயாம்பூக்
கற்பகத்தைத் தேனைக் கலைவளரல் லிக்கேணி
பற்பநா பன்தனையே பற்று.

49. நலியும் துயரெல்லாம் நாடாவே; இன்பம்
பொலியல்லிக் கேணிநீ போந்தே—சலியாமல்
தாமோ தராவென்று தாழ்ந்தெழுந்து சொல்வாயேல்
ஆமோ அருங்கலிதன் ஆட்டு.

50. புன்னை மரத்தின்கீழ் பூவண்ணன் கானத்தில்
என்னை மறந்தே இருந்தேனல்—அன்னைதான்
இல்லில் செறித்தாள் இனியல்லிக் கேணியன்வாய்
இல்லை குழலின்பம் எற்கு.

51. ஆரும் அறியாமல் அன்றென்னைத் தொட்டணைத்து
ஊரும் அறியவே உன்மணப்பேன்—பாருமென்றான்
தேரோடும் வீதி திருவல்லிக் கேணிசென்று
காரே! உரையாயோ கண்டு.

52. என்று வருங்கொலோ என்றயரும் என்நிலையைச்
சென்றல்லிக் கேணிநீ செப்புவையேல்—என்றென்றும்
உண்ணப் பழம்தருவேன் ஒண்தூ தாய்ப் பேடையொடும்
வண்ணக் கிளி! சென்று வா.

53. வண்டிசைக்கும் சோலை வளரல்லிக் கேணிநகர்
கொண்டல் வணர்க்கின்னே கூறீரோ—எண்டிசையும்
பார்த்தேங்கும் என்துயரைப் பாங்கியரே! நீவீரெம்
ஆர்த்தவளை வீழ்தல் அறிந்து.

54. மோகமுறும் நங்கையவள் மூவர் தலைவன்தன்
ஆகமுறும் ஆனந்தம் அற்றவளாய்த்—தாகமுற
கேசவனே! நாரல்லிக் கேணியனே! என்றழுங்கும்
பாசப் பசலைநோய் பாய்ந்து.

55. மந்திரத்தான் சொல்லிவிட்டான் மாயப்பை சாசென்று
சொந்த மருத்துவனே சொல்லறியான்—பந்தமிகும்
தாயவளும் தானறியாள் தண்ணல்லிக் கேணியுறும்
மாயவனே தக்க மருந்து.

56. கேணியல்லி என்றரற்றக் கேட்டிருந்த தாய்வணங்கித்
தூணிருந்து தோன்றிய தூயவா!—காணிலேயோ
என்மகள் தன்பிணிக்கு இன்மருந்து நீயாகி
நன்மகளாய் ஆக்கென்றாள் நைந்து,

57. மன்றல்தான் கொள்வான் மறப்பறியான் என்பதனைத்
தென்றல்தூ தேகித் தெளிவித்தும்—நின்றழிந்து
தேரானே என்னைத் திருவல்லிக் கேணியன்தான்
வாரானே என்றயர்தல் வம்பு.

58. வேதமறை யாளர் விரும்பல்லிக் கேணியனும்
காதல் தலைவனென் கைப்பற்றி—நாதவொலி
சூழவே மங்கலநாண் சூட்டக் கனக்கண்டேன்
தோழியே! என்னும்நீ தூக்கு.

59. பேர்சொல்லி ஊர்சொல்லிப் பேராளன் சீர்சொல்லித்
தார்சொல்லின் நெஞ்சே! தடையில்லை—சீர்பெறுவாய்
தொல்லையே இல்லையால் தூயல்லிக் கேணியனே
வல்லைதரும் வைகுந்த வாழ்வு.

60. இத்தமிழ்ப்பா என்பேன் இசைத்திடுவீர் நெஞ்சுருகி
அத்தனையல் லிக்கேணி அஞ்சலிப்பாம்—சுத்த
குணமுடைய தொண்டரொடு கூடியே சூட்டும்
மணமுடைய வாடா மலர்.

61. எல்லா உலகளிக்கும் ஏரல்லிக் கேணியனை
நல்லாண் நகராதி கேசவன்றன்—சொல்லான
சீர்த்திப்பா ஆறுபத்தும் சேவித்தால் வாழுமே
ஊர்த்துவமாய் இப்பூ வுலகு.

வாழ்த்து

ஆழ்வார்கள் வாழ்க அருளிச் செயல்வாழ்க
சூழ்வார்கள் வாழ்க சுருதிகளும்—வாழ்க
மணவாள மாமுனிகள் மாநிதியாம் பூதூர்
குணவாளன் வாழ்க குளிர்ந்து.

[குறிப்பு: இந்நூலுக்குக் காஞ்சி மஹாவித்வான் P. B. அண்ணங்கராசார்யர் 1-9-82-இல் ஈந்த மதிப்புரையில் பின்வருமாறு வரைந்துள்ளார் :--

"உயர்திரு தமிழ்ப்புலவர் [நல்லாண்பிள்ளைபெற்றாள்] நா. ஆதிகேசவனவர்கள் இயற்றிய திருவல்லிக்கேணியறுபது என்னும் வெண்பாநூலைச் சிற்சில இடங்களில் படித்துப்பார்த்தேன். உள்ளமுகக்க இயற்றப்பட்டிருப்பதுகண்டு மிகவுமுவந்தேன். இலக்கணத்திற்கு இலக்கியமாயிருப்பதோடு பத்தியையும் புத்தியையும் வளர்க்கவல்லதாயுமுள்ளது........இந்நூல் விரைவில் அச்சேறினால் உலகுக்குப் பெரிதுமுதவிபுரிந்ததாகும்"]

# பல வித்வான்களின் பாடல்கள்

தொகுத்து அளித்தவர் : காஞ்சீபுரம் ஸங்கீத வித்வான்
அருளிச்செயல் திலகம் எம். என். வேங்கடவரதன்
[காலஞ்சென்ற மஹாவித்வான் காஞ்சீபுரம் நாயினப் பிள்ளையின் சீடர்.]

மைசூர் வாஸுதேவாசார் கீர்த்தனை

ராகம் : நாயகி] [தாளம் : சதுரச்ர த்ரிபுடை

ஆ: ஸரிமபதநீதபஸ்
அ: ஸ்நீதபமரிகாரிஸ (22 வது மேளஜன்யம்)

பல்லவி நீ பாதமுலநு நம்மிதிநய்யா
ஸ்ரீபார்த்தஸாரதே ! நீவே கதியநி (நீபாத)

அநுபல்லவி நா பாப ஜாலமெல்ல தீர்ச்சி
காபாடுட கெவருந்நாரய்யா ? (நீபாத)

சரணம் வாஸுதேவ! வநஜாயத லோசந!
வாஸுகி சயந! வரகக வாஹந!
நீஸாடி தைவ மெவரனி கான
ஓ ஸாதுஜந ஜீவந! நிஜமுகா (நீ பாத)

1 பல்லவி 0 0

| | | |
|---|---|---|
| , , நிதபா . . . . மபா தபா | மநரிக ரீஸா | , . நிஸரிஸரீ |
| . . நீ. பா . . . . தமு லநு | நம் . . மிதி | . . நய் . . . யா |
| , , ரிஸ ரிமபத நிநிகா. பதாப | தரிஸ் நிஸ்ா.பத | த நீ த பா. ரிமபத |
| . . ஸ்ரீ. பா . . . ர்த்த ஸா . . . | ர-தே . . நீ | வே, கதி. ய-நி |

அநுபல்லவி

| | | |
|---|---|---|
| , , தப ஸ்ா - நி ரீ ஸ் ா நிஸ் ரிஸ் | ரிப் ம்ா ரி ரி ரி ம் | ஸ்ரீஸ் , , ஸ்ா |
| . . நா. பா . . ப ஜா . . | ல. மெ ல் ல. | தீ . . . ர்ச்சி |
| , , ரீ ஸ்ா . . நிஸ்ாப பா தா | பதப தநீ தப | மரிக கரிஸ ம ப த |
| . , காபா . . . . டு . . . ட | கெ . . . வ . ரு | . . ன்னு , . . ர . . ய்ய |

(நீ பாத முலநு நம்மிதிநய்யா)

சரணம்

,, க க ரி ஸ ரிம பம தப மப | தா நீ தா பா | மரிக க ரீ ஸா
.. வாஸு . தே . . . வ வ ன | ஜா . . ய . த | லோ . . . ச ந

,, ரி பா ம மரி மரி க க ரீ ஸா | ,, ரிமாபதா | ரீ ,, தா பா
.. வா . ஸுகி ச . . . ய . : ன . . | .. வர . கக | வா . . . ஹ - ந

.. தபஸ்ா. நிரீஸ்ா நிஸ் நிஸ் | ரீ ரி பாம்ரீ | ம்ரிரி மரிஸ்ா
.. நீ . ஸா . . டி . தை . . | வ மெவ . ரநி | கா . . . ந

,, ரீ ஸ்ா . . நிஸ்ாபபா தப | தாநீ தப மரி | கக ரிஸரி மா பதா
.. ஓஸா . . . , . து ஜ | ன . ஜீ . . , வ | ன . நிஜமு கா

க (நீபாதமூலநு நம்மிதிநய்யா)

2. வடஆற்காடு மேல்மா ஸ்ரீவிலக்ஷ்ணாநந்த பரமாத்மாஜீ அருளியது.

திருமுகமுங் கனிவாயுங் கருணை நோக்குஞ்
செகமளந்த பொன்னடியுந் திருத்தோள் நான்கும்
மருமருவுந் துளவமணி மாலை மார்பும்
மரகதமா மணியனைய வடிவுங் காட்டிக்
கருமருவும் பிறவியினி வாரா வண்ணங்
கடைக்கணிப்பாய் திருவல்லிக் கேணி வாழும்
அருள்மருவும் பார்த்தசா ரதியாந் தேவே!
அடியனேன் திருவடிக்கா ளாகின் றேனே.

3. ஸ்ரீமைசூர் சதாசிவ ராவ்

ராகம் : பைரவி தாளம் : கண்டஜாதி த்ரிபுட

ஆ : ஸரிகமபதநிஸ்

அ : ஸ்நிதபமகரிஸ

பல்லவி :

ஸ்ரீபார்த்தஸாரதே ! கருணாஜலநிதே !
சித்த ஜாரி வீநுதாகமோச நாரவிந்த லோசந ! மாம் பாஹி.

அநுபல்லவி :

கோபால ! வஸுதேவ பால சாரு சீல !
பாண்டவ பால ! வேணு கான லோல !
கோவிந்த ! முகுந்த ! ஜகந்மூல கந்த !
நா கேசவந்த்ய ! சச்சிதாநந்த !

ஸ்வரஸாஹித்யம்

கைரவிணீ தடநிவேச! ஸ்ரீதிருவல்லிக்
கேணி நரரீச! பக்தஜநபோஷ
மாரஜநக! மந்தஹாஸ! தேவராஜ!
ஹ்ருதய கமல வாஸ! ஸ்ரீருக்மிணீச!

சரணம்

ராஜகுமார! ரஜக - வஸ்த்ரபஹார!
குப்ஜ - கந்த - லேபந! மூலாதார!
ஸுஜந - ரக்ஷண! கம்ஸ சாணூராதி
பாரண! நித்யகல்யாண!
புஜகசயந! பூஸுரதோஷண!
ஸுராரிபு - பாரண! ஸ்ரீமந்நாராயண!
ஸதாசிவ - கவி – போஷண! துரீண!

4. மஹாவித்வான் ஸ்ரீ அநந்தக்ருஷ்ண ஐயங்கார் ஸ்வாமி, தென்திருப்பேரை

குருகுலக் கவுரவர் முடிவுறப் பற்குனன்
திருமணித் தேரினில் திகழ்விறற் பாகனார்
திருவரிக் கன்புளா ருயர்பதத் தேறிடும்
பெருவழிக் கேணியாந் திருவலிக் கேணியே.



5. பள்ளிகொண்டான் பிள்ளையவர்களது – பார்த்தசாரதி மாயவன் மாலை.

(பாசுரம் 2)

திருக்கிளர் மார்ப! திருவல்லிக் கேணிய! சீதமுகில்
உருக்கிளர் மேனிய! ஓவாக் கருணைக்கண் ணுத்தமனே!
செருக்கிள ரென்மனச் செல்ல லொழித்தி திகந்தமெலாம்
மருக்கிளர் மாலைப் புயப்பார்த்த சாரதி! மாயவனே!.

6. மேற்படியார் அருளிய வேதவல்லித் தாயார் மாலை.

(பாசுரம் 2)

பண்ணுஞ் சுவையும் பழுத்த பசுந்தமிழ்ப் பாவின்விண்ணும்
மண்ணுந் தொழுநின் புகழ்பாடி மாக்கதி மன்னவெற்குக்
கண்ணுங் கருத்துங் கழலாது நிற்கின்ற கற்பகமே!
எண்ணு மெழுத்து மருள்வேத வல்லி யெனுமன்னையே!

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# யான்பெற்ற அநுபவம்

N. G. கிருஷ்ணமூர்த்தி, A. G's. ஆபீஸ்.

1. அருள்மிகு பார்த்தசாரதி ஸ்வாமிக்கு 5-2-1965 அன்று திருத்துழாய்கொண்டு கோடியருச்சனை செய்தபோது உற்சவ மூர்த்திக்கு முன் நின்று தோன்றிய அநுபவம்;

இருபாலும் அர்ச்சகர்கள் ஏந்தி நின்று
இணையடியே போற்றதிருத் துழாயி னலே
மருவாரும் மலர்மகளும் மகிழ்ந்து நிற்க
மண்மகளும் பினைமகளும் மகிழ்ச்சி பொங்கத்
தருவாரும் திருமலர்க்கை யபயங் காட்டித்
தானன பரத்தினையும் தெரியக் காட்டித்
திருவல்லிக் கேணியமர் தேவே! நின்றன்
திருநாம மாயிரமு மென்றும் காப்பே.

2. அருள்மிகு பார்த்தசாரதி ஸ்வாமிக்கு 7-1-1967 அன்று திருத்துழாய் கொண்டு கோடி அர்ச்சனை செய்தபோது மூலவர் முன் நின்று தோன்றிய அநுபவம்:

பூமாலை தொங்கவிட்ட பொங்கொளிசேர் மேனியுடன்
சீர்மாலைக் காலத்துச் சீரடிமுன்—பேர்மாலைக்
கோடி யருச்சனைகொள் கோவே! எனதுள்ளம்
கோடி யொருவாதே கொள்.

3. ஆயனர் கோலம் கண்டு பாடியது:

கொம்புக் கரங்கொண்டு கோவோம்பி யேழ்விடையின்
கொம்பிடையிற் கூத்தாடிக் கும்பர்சீர்க்—கொம்பைக்
கரம்பிடித்துக் கொங்கைமேற் கண்துயின்ற கோவைச்
சிரந்தாழ்த்தி நிற்பீர் சிறந்து.

4. கீழ்க்குளக்கரை அனுமாருக்கு லக்ஷார்ச்சனை நடந்தபோது எழுதியது:

அல்லிக்கேணி யமர்ந்தருளும் அனுமன் தன்னை
ஆயிரநா மமுமிட்டு அருச்சித் தேன்யான்
பல்லியல்நற் பார்ப்பனர்பல் லோர்நின் றேத்தப்
பண்புடனே நின்றருளும் பவனன் றன்னை
நல்லியல்நா வினினவின்று ஏத்தி நின்றேன்
நான்மறையா ளர்குழுவில் சேர்ந்து நின்றேன்
எல்லியன்ன வாய்மையொடு ஆயுள் பெற்றே
என்றுமே இலங்கிடுமா றருள்வா னின்றே.

# அல்லிக்கேணியமர்ந்தான் உயர் நலம்

ஸ்ரீ உ. வே, C. ஜெகந்நாதாசார்யர்.

பொன்னுருவாய் அணிமருவு பூத மைந்தாய்
புனலுருவாய்க் கனலுருவிற் றிகழுஞ் சோதி
தன்னுருவாய் மன்னுயிரில் மன்னு மெந்தை
தளிர்புரையுந் திருவடிகள் தலைமேற் றுங்கி
மின்னுருவா யுன்னுமவர் சிந்தை யுள்ளே
மெலப்புகுந்து பவமறுக்கு மூல வித்தாய்
கொன்னுருவாய் பல்பிணிமூப் பில்லான் றன்னைக்
கேழல்லிக் கேணிதனிற் கண்டேன் நானே.

மனவாச கங்கடந்த வள்ளல் தன்னை
மதிப்பார்மா மதிமன்னு மருந்து தன்னை
கனவாய புவிபடைத்தே யுகந்தான் றன்னை
கனமாயை யிருள்கடியுங் கதிரோன் றன்னை
நனவாய வுலகிலெமை யுய்த்த ளிக்கும்
நம்பனைநன் முத்தினைமா ணிக்கந் தன்னை
சினமேய அறுவர்பகை செகுத்தான் றன்னைச்
சீரல்லிக் கேணிதனிற் கண்டேன் நானே.



பெம்மானைப் புண்ணியனைப் பெரியோன் றன்னைப்
பிறப்பிலியை யகக்கண்ணுற் காணு மன்பர்
தம்மானைத் தலைமகனைத் தக்கார் பேணுந்
தத்துவனைத் தெவிட்டாத தேனைத் தேவை
எம்மானை யெம்முள்ள மருவு வானை
எந்தைதனை ஏரார்ந்த வெழிலி யன்ன
அம்மானை யறம்புரக்கு மண்ணல் தன்னை
அணியல்லிக் கேணிதனிற் கண்டேன் நானே.

தன்னைக் காட்டித்தன் முன்பின்னுங் காட்டித் தனித்தி லங்கும்
மின்னைக் காட்டி மூவடிமண் மாவலிபால் வேண்டிச் சென்ற
புன்மைதீர் புவியளந்த புனிததிருப் பொற்றாளும் நேரேகாட்டி
அன்னையென நின்றபெரு அண்ணலல் லிக்கேணி யகத்துள் வைப்பாம்.

ஸ்ரீமதே ராமாநுஜாய நம:

# பிருந்தாவன க்ஷேத்திரமென்னும் திருவல்லிக்கேணிக் கலம்பகம்

இயற்றியவர்: ம. ள. ள. ஸ்ரீ. அ. சங்கரலிங்கம் பிள்ளை, B.A.

(இந்நூல், சென்னை, சூளை, ம. ள. ள. ஸ்ரீ. ப. பெருமாள்நாயுடு அவர்கள் குமாரர் ம. ள. ள. ஸ்ரீ, சூ. ப. நாதமுனி நாயுடு அவர்கள் விருப்பத்தின்படி செய்விக்கப்பட்டது. இதனை இயற்றியவர், ம. ள. ள. ஸ்ரீ. முத்தூர் அப்பாவுப்பிள்ளையவர்கள் குமாரர் ம. ள. ள. ஸ்ரீ. அ. சங்கரலிங்கம் பிள்ளை, B.A. அவர்கள். இது, சென்னை ஆவலாக் அச்சியந்திரசாலையில் 1898-இல் பதிப்பிக்கப்பட்டது. இவர்களனைவர்க்கும் நன்றி செலுத்துகின்றோம். மேலும் இதனைப் பார்வையிட்டுச் சிறப்புப்பாயிரங்கள் வழங்கிய பதின்மூறு புலவர் பெருமக்களுக்கும் எங்கள் நன்றி.)

காப்பு.

கட்டளைக் கலித்துறை.

உலக முழுது முடையவ னுந்தி யுதித்தசுத
னுலக முழுது முடைத்தாய் விதித்திடு மொண்புவியி
னுலக முழுது முடையலிக் கேணி யுவந்தருளு
முலக முழுது முடையா னவன்சீ ருரைக்குதுமே. (1)

கலம்பகம் பாயக் களிக்குந் தனஞ்சயன் கார்வலவன்
கலம்பகம் பாடக் கதிநனி கிட்டக் கருவரிமே
கலம்பக மாறக் குருகையர் நாதன் கழலிணைகள்
கலம்பக முற்றபுன் கன்மனத் தாலே கருதுவமே. (2)

பொய்கைபேய் மாறன் கலியன் பொலிபுகழ் பூதன்பாண
னய்யன் குலசே கரன்கோதை தொண்ட ரடிப்பொடியோ
சைவிண்டு சித்தன் மதுர கவிமழி சைமனடி
மெய்யன் பொடுதினம் மேதை வரச்சிர மேந்துவமே. (3)

ஆருத பத்தி யெதிராசர் பூதூ ரருமுனிநே
யிருத சிங்கா தனராய ரேழுபத் தீரிருவர்
மாருது வந்துவந் தண்டிடு மாலடைப் புன்பிறவி
நீருக நெஞ்சி லவர்பாத நித்தம் நிறுவுவமே. (4)

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நரன்பெறு வலவ னான நாரணன் புகழை யானும்
வரன்பெறு கலம்ப கத்தால் வையக மீது சொல்லல்
கரன்பெற லற்ற பங்கு கடவுளர் கனியை யீண்ட
வுரன்பெற லொக்கு மென்று னுலகமு மொக்கு மென்னே.

நூல்

மயங்கிசைக் கொச்சகக் கலிப்பா.

எட்டடித் தரவுகள்.

நீர்கொண்ட வரிவண்ண மெவ்வண்ண மவ்வண்ணங்
கூர்கொண்ட நகவண்ண மவ்வண்ண மெவ்வண்ணம்
மோர்கொண்ட வரிவண்ண மிவ்வண்ண முதைகொண்டு
போர்கொண்ட முனைக்களத்துப் புகழ்கொண்ட தனஞ்சயனார்
தேர்கொண்ட வனமளிக்கத் தேவளித்த விளர்கொண்ட
தார்கொண்ட நெடுங்கோடை தணியாம லுகைத்தவர்தஞ்
சூர்கொண்ட வுட்டமமுஞ் சுயோதனர்தம் பெருவாழ்வுஞ்
சார்கொண்ட நிலைப்பரமுந் தவிர்த்தளித்த வளியானே!. (1)

சீர்பூத்த விந்திரையுந் திகழலிக மகிமகளு
மார்பூத்த நகைநிலை யணங்குமிரு பாற்றெருவ
வேர்பூத்த துணர்பொ துளி யெழிற்பூத்த தோடகத்து
வார்பூத்த துணைச்சேக்கை வாக்காள்சேர் தாதாதி
நேர்பூத்த பத்தியுட னிரந்தரமும் பணியாடப்
பேர்பூத்த வைகுந்தம் பெயர்ந்திரவிக் குரனுழையாக்
கார்பூத்த கோடரத்தாற் களைகொள்பிருந் தாவனத்திற்
பார்பூத்த வடியர்தமைப் பாலிக்க நின்றோய்கேள். (2)

ஈரடித் தாழிசைகள்.

மயிடஞ்சேர் யாமக்கோன் மருமாற்கா வகிவிடங்கன்
கயிடஞ்சேர் நாரத்தைக் காட்டற்கு நிற்பாயால். (1)

சிலைமுனிவ னரிக்குருளை சேனையதி பதியாகி
மலையாத படிசெய்த மதிகாட்ட நிற்பாயால். (2)

சிதடன்சேய் நினைவிட்டச் சிற்றறையில் வீழ்த்தப்புன்
சிதடன்செய் விரகழித்த செயல்காட்ட நிற்பாயால். (3)

கதமகனார் நிகம்வியக் கனல்விழுவ னெனச்சூழ்ந்து
சதமகனூற் றடுத்தபெருந் தயைகாட்ட நிற்பாயால். (4)

முனிமுனியான் சுயோதனனுர் மொய்யமரி லிளையானென்
றுனிக்குழைக்கா மால்விடுத்த துணர்விக்க நிற்பாயால். (5)

சுதமுறுமென் றத்தையரைச் சூழ்ந்துவிடுத் திருதரமங்
கதமேவாப் புரிவிரகைக் காட்டற்கு நிற்பாயால். (6)

## ஈரடி அராகங்கள்.

முடுகிய வலியொடு முதியவன் முடுகிட
விடுகதிர் சுடரரி வெருவுற நிலேயினே. (1)

சுடர்சுதன் விடமுமிழ் சுடுகணே தொடுகண
மிடமரிபுவியுற விணேமலர் நிறுவினே. (2)

முனியுனு மிதமமர் முதிர்கனி விழமிகை
நனியுற நொடியவர் நலியடு மருளினே. (3)

அரவுறு கொடியவ னவையதி லுறுபல
ருரமொடு வலறிட வுயரரு ளுதவினே. (4)

## ஈரடித் தாழிசைகள்.

களையார்ந்த ககபதிமேற் கவினுறவிண் பொலிந்தோய்நீ
களையார்ந்து தனஞ்சயனுர் கவரியிருந் ததுவியப்பே. (1)

பலசமட மகடுறையப் பலவமுங்கி னெருவமுங்காய்
நலமொடுங்கி யுருவெடுத்த நற்செய்கை யோர்வியப்பே. (2)

ஓவியமான் றிரௌபதைக்கே யொண்டுகிலு மளித்தருணீ
கோவியர்பூந் துகில்கொண்டு குருந்தணேந்த தோர்வியப்பே. (3)

திருக்கம்புந் திகிரியுமா செய்யகரம் மேல்வீச
மருக்கொண்டல் வண்ணன்பேர் மருவியது மோர்வியப்பே. (4)

## நாற்சீரோரடி யம்போதரங்கம்.

கவிமே லெழுகூ விரமுறு கவரி
துவிகா லிலிமா துதிகொள விடுவோய். (1)

கனமூ ரறமார் கதிகொடு நிகமம்
மனமா னவுமீ மதியுற வறைவோய். (2)

## முச்சீரோரடி யம்போதரங்கம்.

தளருறு மடியர்தெ ருட்டினே. (1)
தடவென வகளமு ருட்டினே. (2)
களமுறு பவனேம ருட்டினே. (3)
கடமமர் வழுவைவெ ருட்டினே. (4)

இருசீரோரடி யம்போதரங்கம்

அருள்கொடு கண்ணிணை. அமருறு புண்ணிணை.
மருள்கெடு மண்ணிணை. அகமலர் தண்ணிணை.
அகலிட விண்ணிணை. அமிழ்தெனும் பண்ணிணை.
இகல்கொடு நண்ணிணை. அமிழ்துறு பெண்ணிணை.

தனிச்சொல்.

எனவாங்கு

சுரிதகம்.

முரசுயர்த் தோற்கா முண்டகச் செக்க
ரரவுயர்த் தோனிட மல்லியின் மெல்லிய
வங்கிரி சோண மாக மண்டலி
கங்கந் துறந்து காதலித் தேகி
மறுத்திடப் பூசல் வளைத்துத் தரைப்பர
மறுத்த வளியா யச்சுதா தாமக்
கிரீடியின் வலவா கிண்கிணி மெல்லடித்
திருவின் கேள்வா வரவணைச் செல்வா
வந்தமு மாதியா யலகிலா தவனுய்
சுந்தர மென்குய வசோதையின் பட்டியாய்
வந்தவ தரித்த வைகுந்த வாசா
வண்டர்களிழிய வருத்தி புரியும்
மண்டலம் மன்னிய மன்னலிக் கேணி
நின்றரு ணித்தியா நின்மலா நெடியா
யுன்றிருப் பாத முச்சிமேற் கொண்டு
சந்ததம் நின்பணி தவறுது செய்ய
மந்த மனத்தின் மாறுது புல்லி
யுறுபய னீயே யுவந்துகைக் கொண்டு
சிறுவனைப் புரக்கச் சிறிதருள் செய்ய
வேண்டு மண்ணலே வேண்டிய
வண்டர்தந் துயர மகற்றிய விறையே. 1

நேரிசை வெண்பா.

இறைக்குதரம் முன்வீறிப் பின்னி லிறையே
யிறைக்குதரந் தேக்கவிட ரேற்கு—மிறைக்குதர
மாதியா யென்றகவ வற்றை யதைத்திதித்த
நீதியா யென்னடலை நீக்கு. 2

கட்டளைக் கலித்துறை.

நீக்குதல் கூடாத நீள்செடி சுற்றிட நீணிலத்தே
யாக்குதல் செய்வ தறிகிலாக் கிஞ்ச னடைவளுரைப்
போக்குதல் வேண்டும் பிருந்தா வனத்துறு புண்ணியபார்
காக்குதல் பூண்ட கடிபூந் துளவணி கார்வணனே. 3

மடக்கு.

பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏந்தியெ டுத்ததுங் கைம்மலையே
யெழுந்துமு னிந்ததுங் கைம்மலையே
யிசைத்து முனின்றது மங்குழலே
யிடத்தினிற் கொண்டது மங்குழலே

காய்ந்தறக் கொன்றதுங் கஞ்சனையே
கமலத்த மைத்ததுங் கஞ்சனையே
களிக்கவு கைத்ததுங் கந்துகமே
ககனப்ப டுக்கையுங் கந்துகமே

மாந்திய தஞ்ஞையின் செம்பாலே
மருவிய தும்பெருஞ் செம்பாலே
மாற்றிய ளித்ததும் வன்சிலையே
வாகில ணிந்ததும் வன்சிலையே

வாய்ந்துபு ரந்தது மோங்கலையே
வருவத கற்றிட வோங்கலையே
வாரிவி டுத்தது மஞ்சரமே
வயங்கிய துந்துள வஞ்சரமே. 4

புயவகுப்பு.

ஆசிரிய வண்ண விருத்தம்.

தனதனன தந்ததன - தனதனன தந்ததன
தனதனன தத்ததன - தனத்ததன தனந்தன.

சரமுறுத னஞ்சயன்ம னழலிறைவ ழங்குபரி
சமரிடைசெ லுத்தியரு மகிழ்ச்சியொடு வளர்ந்தன
சலசலம தம்பொழிக ரியினிகரு மங்கவர
சனமியத வத்துருவொ டடுத்தறமு மிரந்தன

சகததுரி யன்றெருகுத ளமதிபதி சந்தனும
தலைகொளவொண் சக்கரமு னெடுத்துமிக விலங்கின
சடசடென முந்தியமர் தறுகணொடு தந்தபடி
சணநொடியி லெற்றமிக வுருத்தலகு வழங்கின

அரவுறுகொ டுங்கொடிய னரையிலுறு பொங்கணிக
ளறவறந துத்தியவ ரழிக்கவரி சுமந்தன
அமரிடைம கன்றுயில வகமெழுவ ழுங்கலுட
னழியுமன ருச்சுனனை யணைத்துநனி சிறந்தன

அதிவிரைவு டன்றரும ருமகதுரி யன்றபுத
வழகுபுனை யத்தொடையி லடித்துமலர் செறிந்தன
அமரருறு வன்றுயர கலலசுரர் நொந்துமன
மழவழவு ரத்திலம ரடுத்தரி கடுறந்தன.

கரமுறுவ ளந்திகிரி மகவடுச யிந்தவன
கடமறவி ரிச்சிகளை மறைக்கநனி தொடங்கின
கனபதுசி ரந்துளநி ரயமிறைவ னந்தகன
கமலரவு ரத்தருகி யழித்துவலி நிமிர்ந்தன

கடியரவி னஞ்சுவிடு கரனழிய மஞ்சுசிலை
கதுமெனவெ டுத்துடல கமத்தியசி சொரிந்தன
களகளென வம்பொழிய நளிநிரைவ ருந்தமலை
கர நுனிநி றுத்தியவை களிப்பநனி புரந்தன.

பரவுறுகு ரங்கினம னரியழிய மண்டிசெறி
பலமணியி ழைத்தமுடி சிறப்பொடவரணிந்தன
பளபளவ யங்கியிரு மலையெனகை சந்தணிகொள்
பணமுலைய டுத்துபுய மணைக்கநனிகுழைந்தன



பதின்மர்தொடு செந்தமிழி னறுமலர்செ றிந்தழகு
படுவதிம ணக்குதொடை விருப்பமொடுபுனைந்தன
பலவரண்வ ளைந்துளகை ரவிணியதி னின்றுவழி
பகர்மறையி னத்தரது பணைத்தவிருபுயங்களே. 5

நேரிசை வெண்பா.

புயல்சூழ்ந்த காசூழ்ந்த தொன்னல்லிக் கேணி
வியல்சூழ்ந்த வான்கோயில் வீறு—மியல்சூழ்ந்த
தேவாதி தேவன் றிருவடியை நாடியகால்
போவா திருக்குமோ பொக்கு. 6

கட்டளைக் கலித்துறை.

பொக்க மருவிய புன்புனங் கொண்டு பொலஞ்செறிந்து
சொக்க மருவிய தூயதிரு வல்லித் துரவமரும்
பக்க மருவிய பண்புறு பாரத சாரதியே
துக்க மருவிய துன்புற லின்று துறந்தருளே. 7

### பதிஞன்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அருள்செழித் திழியு மாய்மலர்த் திட்டி
யரிந்தம ஞவிலம் படியு
மடல்வட வைசே ரந்தகனூழி
லாற்றிடு மழலென வனங்கன்

மருள்செறி விசிகம் மாரணங் காட்ட
மணவையி னரியினி லனுங்கி
மரமரம் வெருவி மந்துரை யெழுந்து
மாதிர மேகிடுஞ் சுகம்போல்

கருள்செறி குவளை கத்திகை செறிந்த
கழுதுருக் கண்டுநன் மயங்குங்
கதுப்பிரு பாலுங் கனரசம் பொழியக்
கலுழ்வது மறிகிலர் வாகை

யிருள்செறி துடவை யிஞ்சியைக் கோல
விலங்கிய பீடர மூடு
மியங்குமென் றுட்கி யிப்பியும் வளையு
மிருகர மேந்திடு மவரே. 8

### பதிஞன்கு சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏழ்குரை விசித்த வியந்திரத் தரணி
யேங்கிட மடியினை யுரிஞ்ச
வெழுவரண் வளைத்த வெண்கணன் கண்ணு
யிரமுடைக் கோபதி முதலோர்

தாழ்மனத் திழிந்து தங்கயஞ் சாற்றத்
தயையுறை பனித்திடுஞ் சவுரி
தலம்பிளந் தன்னுட் டானவற் செற்ற
தண்ணளி மண்டிய விண்டின்

கேழ்கிள ரல்லிக் கேணியி லிரதி
கேள்வனுக் குடைந்தழ லெதுகொல்
கிளர்பகக் குயவில் கிண்ணமென் நகிலக்
கிதிவலித் திண்டியைப் பூட்டிப்

பேழிரு புகுடிப் பெருந்தடி யிடத்துப்
பிறங்குகோப் பிரதர மேவிப்
பின்னிட மலையாய் பெருகுல கும்மைப்
பேதைய ரென்பது பிழையோ. 9

### கட்டளைக்கலித்துறை.

ஓசு பதின்மர்தஞ் செந்தமி ழோதா யுருகியவர்
பேசு மரவணைச் செல்வனைப் பேசாய் பிதிரளவுங்
காசு குழகுசெய் மொய்ம்பினர் கண் ணுறு காதலினன்
மாசு கவித்தா யலித்துர வாரருள் வாய்த்திடுமே. 10

### நேரிசை வெண்பா.

வாயனைத்து முண்டானை வானல்லிக் கேணிவளர்
மாயனைச்சே ராத மருக்குழலே—வாயம்
மலைநனைப்பாய் வாய்க்கு மடலூர நேர்வா
யலைநனைப்பா யண்ணலரு ளார். 11

### அம்மானை.

ஆபாரந் தனைப்புரந்த வலிக்கேணி யச்சுதனுர்
பூபாரந் தீர்ப்பதற்குப் புவிவந்தா ரம்மானை
பூபாரந் தீர்ப்பதற்குப் புவிவந்தா ராமாகின்
மாபார தம்முடிக்க வலவரோகா ணம்மானை
வலவரவர் வலவராய் வாய்ந்ததினு லம்மானை. 12

### கொச்சகக் கலிப்பா,

அம்மானை யடியவர்த மனையானை யருளினனைப்
பெம்மானை யலிக்கேணிப் பெருமானைப் பெருஞ்சினத்த
கய்ம்மானை வலியடர்த்த கரத்தானைக் கடையினனை
யெம்மானை விசையன்றே ரிருந்தானை யிருத்திவாழ்வாம். 13

### நேரிசை வெண்பா.

வாழ்வடைய வன்னெஞ்சே மற்றுனக்குச் சொல்வன்கேள்
பேழ்வுடைய வல்லிப் பெருங்கேணித்—தாழ்செய்யி
னந்துளவத் தானத்தா னத்தான்வெண் சக்கரத்தா
னந்துளவத் தானை நவில். 14

### மடக்கு.

### பன்னிருசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வில்லினிற் கொன்றதும் பதங்கலையே
 வீங்கவ டுத்ததும் பதங்கலையே
 வெறுவவ ழித்தது மிருகடமே
 விறவ ணிந்தது மிருகடமே

மல்லினிற் செற்றதுஞ் சினவரையே
மருவிமு னின்றதுஞ் சினவரையே
மகிழ்வொட ரைத்ததும் பொருமலேயே
மாற்றிய தும்மகப் பொருமலேயே

கல்லினிற் செய்தது மகலிகையே
களிக்கக் கொடுப்பது மகலிகையே
கடவுளர்க் கீந்ததும் வளமருந்தே
கடவுளும் பற்பம வளமருந்தே

செல்லினிற் பெற்றது மருப்புரமே
தேயவ ளர்த்தது மருப்புரமே
சேடரு றழ்வும துரவிடமே
சேர்ந்தது மன்னலித் துரவிடமே. 15

பதினறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

இடந்திணிந்த சிருங்கலத்தா லியாக்கைக் காற்று
திமிர்த்தலறிக் குரங்கியிரு ஞாங்கர் மின்ன
விடந்தாலம் வளியோக விறப்புக் கொள்ள
விருசிறையுங் கழிதளம்பத் தரணி நின்று

பெடமிழியு முவதையெனப் பொழியுந் தோலின்
பெருகுகட மருணவத்திற் பெருக வத்தாற்
பெருமிதத்து முனஞ்செற்ற தறம றந்து
பெரியவிழி நறியபிழிக் குசும மிட்ட

படமதன னெனச்சாற்றுங் கூழை யீட்டப்
படர்பசலைக் கொடியுவதி வீரை கூரப்
பரிதபிக்க விமகரன்சார் பாற்ற ரங்கம்
பனித்துநனி யெழுவாற்று தயர்வ ளங்தோ

விடவரவின் றலைநின்றுர் வீறிக் கைர
விணிநின்று ரணிதன்றுட் டொத்தர் முன்னம்
விளங்கியிருந் தாரினமு மோர்கோ லேவி
வியன்வீரை யழுத்தருளா ரவட்கு வாழ்வே. 16

வேற்ருெலி வெண்டுறை.

வாழ்விசையன் மாவுகைத்த வலிக்கேணி வனமாலி வளமை முற்று
பேழ்விசையன் மருளளிசூழ் பெருந்தாமம் பெறுதற்குப் பேறி லாது
நேயமுந் தோயமும் நிமிர்ந்து பொங்கிடக்
காயமுந் தாயமுங் கலந்து நீந்திட
வாயமுந் தேயமு மலர்க டுற்றிடச்
சாயமுந் தீயமுந் தவிர்ந்து போந்திட
மாயனை நோக்கியே மயல்கின் றுளரோ. 17

### கலிவிருத்தம்.

அரோசிக மமரரை யடர்த்த மாமக
னுரோருகம் வருடிய வொண்செங் கைவளர்
கரோருகங் கனகனைக் காய்ந்த சேவகன்
சரோருகப் பதமலர் தாழ்ந்து வீறுவாம். 18

### ஒருபொருண்மேல் மூன்றடுக்கிவந்த ஆசிரியத்தாழிசை.

வீறு விதத்த விளர்நாகு றலிக்கேணி
மாற னுருவார்ந்த மாத்துணியி னம்மை
தூறுஞ் சவிதாவின் சோதியினை மானுமே.

கோலம் பொதிந்த கொடிக்கான லலிக்கேணிச்
சீல னுருவார்ந்த சீர்குருவி னம்மை
ஞாலம் வளைத்தநிசி நதிபதியை மானுமே.

சாமப் பிருந்தைத் தகரமுறு மலிக்கேணி
வாம னுருவார்ந்த வான்கடியி னம்மை
தாம னுறுவாரத் தகுதியினை மானுமே. 19

### கட்டளைக் கலித்துறை.

மானச மாரரி மந்தியோ டாடு மலிக்குளனில்
மானசம் வாடிட வென்பூ மழைக்கண் மழைபொழிய
மானச லார்ந்திவள் மாயுமுன் புல்லுவை யல்லைநிற
மானசம் பூகம் வளையேந்து மாதவ வாமனனே. 20

### கொற்றியார்.

### தாழிசை.

வாமகாளமும் வெளிறவெல்லிய வண்ணமார்வன வளிகமம்
வாசமந்தர முந்தவீசிடு கேசமுந்தட வெந்திரத்
தாமனுரகம் மறுகியுத்தியென் றத்தியோடுத லெனவெழ
தவளமுற்றவி லுற்றநாமமி கவளமுற்றவ ணிந்திரு
சேமம்யாணர்க யிரவிணிப்பதி செப்புவீதிவ ருகொற்றியீர்
சிதரன்றிரு வென்றிநாதம தீதமென்றிடி டம்புரி
நீமமார்கள மிதுவெனக்குறி நிறுவினீரவன் றுயிலணை
நீலிமின்னிய கன்னிகாலிலி யாலிசுட்டிய ருள்விரே. 21

### நேரிசை வெண்பா.

ஏமன் விடுத்த விருந்தூத ரீர்த்துவந்து
வீம நிரயத்து வீழ்த்தாமுன்—நாமமுற
நாகஞ் சிரமேறி நன்னடஞ்செய் தானடியை
யாக முறப்பணிகு வாம். 22

### கைக்கிளை மருட்பா.

வாமபதம் பார்கூடும் வண்டாரும் வாடுஞ்சே
னீமவிழி போரிமைக்கும் நீர்மையாற்—சேமச்
சிறையலித் துரவமர் நறைமலி குழலார்
பறையனத் தவனைப் படைத்த
விறையவ ருமிழ்ந்த வெழிற்பூங் கொடியே. 23

### மடக்கு.

#### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏகும் படவினமே யேகும் படவினமே
யிறைக்கும் பெருவிளரி யிறைக்கும் பெருவிளரி
போகு மிரவதமே போகு மிரவதமே
பூக்கும் பெருங்காயல் பூக்கும் பெருங்காயல்
போகும் படியளந்தார் போகும் படியளந்தார்
போது தரமாட்டார் போது தரமாட்டார்
வாகு மதிபொருந்தும் வாகு மதிபொருந்தும்
வண்ண மலரணியார் வண்ண மலரணியார். 24

### சம்பிரதம்.



#### முப்பத்திரண்டுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆர்நமக் கெதிரவ ணரசர்க ளெத்துணை
யன்புமே நம்பக்க லாறுது மிகவுள
வண்ண லாஞ் சோழனைச் சூரிய னாக்கினே
மதிமலைச் சேரனை வானவ னாக்கினே
மதிமதுர நீரினைச் செப்புமை யாக்கியவ்
வழகுற்ற மையினைப் பெருவன மாக்குவோ
மவ்வனந் தன்னையே பாணியா யாக்குவோ
மதனைக்கை யாக்குவோங் கையினு லள்ளிய

வோர்பிடி மண்ணினை யுகமென வாக்குவோ
முயிரற்ற முண்டத்துத் தலைவர வோதுவோ
மோங்கிய தலையினைக் காயமா யாக்குவோ
மொருநொடிப் பொழுதிலக் காயத்தை மாற்றியே
யொப்புமை யிலதெனும் நல்லுரு வாக்குவோ
மோமகுண் டத்தையே யுயர்தட மாக்குவோ
முன்னுசெங் குவளையெக் குவளையே யாயினு
மொளிருகண் ணுக்குவோ முண்மையே பொய்ம்மொழி

யார்மிகச் சொல்வது மாயமே யாகினு
மம்மாயத் தினையொரு வழகுற்ற துட்டென
வாக்குவோங் காற்றினை யசையுகா லாக்குவோ
மகங்கையிற் கொண்டதோர் பொருளினைப் பெருவழி
யாக்குவோ மவ்வழி யினைக்கண மாற்றியே
யப்பெரும் வழியினைப் புத்திர னுக்குவோ
மம்பணக் கொக்கினைக் குதிரையா யாக்குவோ
மறைந்திட்ட விதுவெலாம் வித்தையோ வரிந்தம

னீர்படி மேனியர் துணிகொளும் மறைபொரு
ணித்தியந் தூக்கியே பார்த்திடு வோமிது
நிச்சயங் குணிகொளும் மலைவிலன் கண்ணுமை
நிலவிடச் செய்குவோம் நீளெரி குளத்தினி
னின்றிடப் பண்ணுவோந் திரணமே பெருவித்தை
நிலைவித்தை செப்பிடக் கேண்மினோ வலிக்குளம்
நீண்டவர் மாயரு மேற்றும தித்திட
நெடியமுட் டாளையே வரவழைத் திடுவமே. 25

நேரிசை வெண்பா.

மகசங் கோட்டுள்ள மேதை வருமுள்ள
மேகசத்தைக் காத்தருள மேலாலம்—மேகசம்பு
நிற்பரலிக் கேணியி னீண்மறையின் வான்முடியிற்
பொற்புறடி யார்மனத்திற் புக்கு. 26

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

புக்கிலை வெறுத்து ளார்க்கே பொற்பதம் வாய்ப்ப தையங்
குக்கியை வளர்ப்போர் நாளுங் குமுறுநி ரயத்தை யுற்றுத்
துக்கம துறுவ ரந்தோ தூய்திரு வல்லிக் கேணி
பொக்கற நின்ற மாயன் பொன்னடி தொழுவோ மியாமே. 27

கட்டளைக் கலித்துறை.

மேக மருவிய வண்ணனே மேலவர் மேவுறுவான்
மாக மருவிய மத்தக மன்ன மரகதமே
நாக மருவிய நாரண நம்பனே நான்மறையோ
ராக மருவிய வம்மலிக் கேணி யமர்ந்தவனே. 28

தாழிசை.

அமர்வளைத்து மலைவளைத்து விடர்வளைத்த திரிபுர
மறவளைத்த பிறையளித்த வறவழித்த வரனுடன்
றமர்வளைத்துச் சுவைவளைத்த சிலைவளைத்துத் தாக்குறுந்
தழல்வளைத்த வுடல்வளைத்த தரம்வளைத்த மதனனுஞ்
சமர்வளைக்க மைவளைத்த தரைவளைத்த நீருடன்
றனவளைத்த முலைவளத்தர் தழல்வளைக்க வான்பிறைக்
கமர்வளைத்த வனல்வளைக்கக் கடல்வளைத்த வலிக்குளக்
கனவளைத்த டுயர்வளைக்கக் கவல்வளைத்த லறிவரோ. 29

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

அறிவினன் மறையோ ரகத்திலு முடியா
யமர்ந்தவன் றண்ணளி சுரக்கு
நெறியின னழியா நிருமல னெஞ்சா
நித்திய னிதமலிக் கேணிக்
குறியின னண்டாக் கொள்கைய னெட்டாக்
குணமுடைப் பதியினன் மிகுத்த
பொறியின னருளும் புண்ணிய னரிதாம்
பொன்னடி புகழுதுந் தினமே. 30

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தினமணியின லின்றிடுங் கோரந்
தெருளிய தழலெழு வன்பால்
சீதளச் சாகைப் பாதவ நிழலிற்
றிளைத்திடும் பேறிலா தழுங்கும்
வனமணி யளியார் திதிகழி மலிந்த
வணங்குக ளங்கனைப் பழிக்கும்
வகுப்புடை நுதலும் வரியமைக் கொக்கின்
வடுவினைக் கடுத்திடுந் திருக்குந்
தனமணிந் தென்னப் பத்திரத் திதலை
தகைமைசெய் மெல்லிய தனமுந்
தழங்கிய சிலம்புந் திகழுறு கொடியே
தளர்வதே னெடியினிற் காண்பை
கனமணி தளியுங் காருலா மரியும்
களையமை மறுகொடு சேர்புங்
கண்ணிணை யார வைந்தெனுந் தீர்த்தக்
கயிரவி ணிப்பதி யிடையே. 31

நேரிசை வெண்பா.

ஏழ்பரியோ னண்டா வெழிலல்லிக் கேணியர்த
மாழ்வார் பதின்ம ரவரடியிற்—றாழ்குவமேன்
மன்பிரமம் வாய்த்திடும் மாயாது மாறிவரும்
புன்பிறவித் துன்பமும் போம். 32

பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

போத்திரம் வேணி சிகரமோதிப்
பொங்கிய வுவரெனப் பயிற
பொம்மிய துடவைக் குயிலிடைப் பயிலும்
பொழிலுறு பணவிடத் தட்டம்

நேத்திர மதுவே சுருதியு மமைந்த
நீட்புதைப் போகியுங் குளிரி
நீடக நனவுத் தண்டினி னுழைந்தும்
நெடிதுயிர்த் துயிர்த்தற வீயும்

மாத்திர மிவணே காணலா மீண்டும்
மருவிய வுயிருறு மென்னும்
மாண்புடை யல்லிக் கேணியிலமர்ந்து
மதுசுரர்க் குதவிய மாயோய்

வேத்திர விகளி நின்சுதன் றூங்கி
வீடெனுந் தொள்ளையில் வதியும்
வெருவிய வென்னை வீட்டினன் கயிர
விணியெனும் பெரும்பதி யிதுவோ. 33

கட்டளைக் கலித்துறை.

ஓசந் தழுவு முயரல்லிக் கேணி யுடைபதிச
ரோசப் பதத்தைவி ரோதமா முட்பகை யோடிடக்கு
ரோச மவன்வாழ் பதியென் றுறைப்பா ருகமறிசி
ரோசம் விளர்முன்ன ரொட்டுவா மப்பதி யொல்பணிங்தே. 34

நேரிசை வெண்பா.

ஏண மடர்த்தவனே யேரல்லிக் கேணியா
யேண மமைமாத ரின்பமெனு—மாணமொன்
றில்லையெனின் முத்தி யிடம்வாய்க்கும் வாய்மையே
யொல்லையினி லண்டிடு மோசு. 35

குறம்.

எண்சீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சுந்தர மென்முலைத் துணைவிழி மயிலே
    சூடிய பன்மலர்த் தொகுதியற் குழலே
யந்தர மேத்துகை ரவிணியி லமரு
    மாண்டவர் மெச்சிடு மருகுற மகளு
னெந்தர நீயறிந் தெழின்மணி பலவே
    யின்னடி சிலும்வரி யெனக்கினி யருளே
கந்தர மெல்லிடைக் களியமை குறியே
    கண்டன னண்ணலுங் கலவுவ ருனையே. 36

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உன்னு மலிக்குளந் தன்னி லுறைபவ ரோங்கிய பொன்முடியார்
மன்னு சினகர மென்னு பெருமற மாகிய மன்முடியிற்
றுன்னு கிளிகளே மின்னு தமமுடி தூங்கிய காதலரு
மென்னு ளுறுபெருந் தென்னு றபுரியி னேங்கவு மெண்ணிலரே. 37



மடக்கு.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எண்ணற் கரியானை யெண்ணற் கரியானை
    யிரங்கிப் புரந்தானை யிரங்கிப் புரந்தானை
விண்ணிற் பொலிந்தானை விண்ணிற் பொலிந்தானை
    வீட்டுக் குரியானை வீட்டுக் குரியானை
மண்ணி லளித்தானை மண்ணி லளித்தானை
    மருவார் பகையானை மருவார் பகையானை
கண்ணிக் குமைத்தானைக் கண்ணிக் குமைத்தானைக்
    கணலிக் குளத்தானைக் கணலிக் குளத்தானை. 38

எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஐயனே யல்லிக் கேணியி லமரு மாண்டகா வையம்படை மின்னுங்
கையனே செய்ய காலனே கரிய கண்ணனே காதலித் தவற்கு
மெய்யனே பார்த்தன் பாகனே நினது மெல்லடி யண்டிடா தயரும்
பொய்யனே னுய்யப் புகுவழி யுளதோ புவியினைக் காக்குதல் பூண்டோய். 39

பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்

பூணையிற் ருெறுவர் பொதுளிய பூக்கப்
பொதுவெனுந் தலத்தினிற் பயின்று
பூவம ரறனேர் புட்செறிந் திமிரும்
புதுவடி யிழிந்திடு குழலுஞ்

சாணையிற் பொலிந்த சவியமர் கதுப்புந்
தவத்துறு விரத்தியர் பிணிக்கச்
சமர்த்தனே விசித் தனியிட மமரச்
சார்விய சித்தசன் பொருந்தி

யாணையி லவரு மகப்படு திறத்தை
யறிந்திட முன்னெழுந் ததுபோ
லழகுறு பறம்பு மரம்பையைப் பழிக்கு
மாசுறு குறங்கிரண் டுடையார்

வீணையிற் பயிலும் வியன்றமிழ் மொழியார்
வீட்டினி னுரையினை யுட்கொள்
விமலனே யென்பா வேற்குமோ கயிர
விணியரு ளொண்மர கதமே. 40



## இரங்கல்.

### தாழிசை.

மேகம்பெறு காவேமிகு மோகங்கொடு பூவே
மேலேவிரி யேடேபல பூலேயடர் காடே
வேகங்கொடு தானேவளர் தேகம்பெறு மானே
வேளேகொடு மாடேமய லாலேமிகு பேடே
நீகஞ்செறி யறலேநனி சோகங்கொடு சிறலே
நீடேமய லுளமேவிளர் வாடேவலிக் குளமே
மாகம்பணி தேவேகழி யூகம்பெறு கோவே
மனமேயினி யாறேன்மயன் முனமேயணை யாரே. 41

### நேரிசை வெண்பா.

யாருண்டு வன்மனமே யார்ந்தபவம் நீக்குதற்குக்
காருண்ட சோலைக் கவினல்லி—யாரல்லால்
வேறுவே றெண்ணமினி வேண்டா மவரடியிற்
பேறுவே றுண்டோ பெற. 42

## வலைச்சியார்.

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உண்டே யுலக முழுதுமிழ்ந்தோ னுறையும் பதியிற் கிளிமொழியே
குண்டே யாகக் கண்டுணையுங் கொடுவார் வலையாக் கொடுதிரிவீர்
கண்டேன் வராலுந் திருக்கையுங் கயலஞ் சுறவு மலங்குறே
னுண்டேன் கலையை நீரெடுத்தா னுறை கோடி தருகுவனே. 43

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தருவிவண் கொணர்தரு தகைமையன் சமரிடைத்
தனஞ்சயன் பரிவிடு முரவோன்
முருகவிழ் மடந்தையர் முனைந்தெழுந் தடிக்கவு
முலைச்சுக மறிந்துபின் வருவோ
னருவினைத் தொடக்கறுத் தடியவர் தமதம
மடர்ப்பவ னலித்துர விறையே
யுருநனி யழியவா ழிவளைத னமகல
வுருகில னிவனரு ளுளதோ. 44

## மேகவிடு தூது.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

உளதோ விலதோ வெனமருளு
மொள்ளி டையாள் களியுறவே
யுலவை யுட்கொள் விடதரத்தி
ஞேங்கு மல்லிக் கேணியர்தங்
குளமே யரியாக் கொடுமன்னீர்
கொண்டு வானுப் பொழிபுயல்காள்
குவிந்த நகிலம் பார்த்தயர்வாள்
கூந்தன் வாரித் தான்முடியா
ளளவே யன்றி மிகவழுவா
ளஞ்சந் தணியா ளனலெனவே
யாழி சங்கு மகன்றிடவே
யழிந்தா ளந்தோ வகமுருகிக்
களவே பயிலுங் கொடுவலவர்
கால்பூந் துளவக் கடிமாலை
கடிது கொணர்வீ ரலதேயேல்
காமன் பழிநீர் பெறுவீரே. 45

### ஆசிரியச்சந்தத் தாழிசை.

நீர்சூழும் பாரல்லி நெடியர்வாழ் துரவி
  னிருண்ட செல்போல நீட்கரிய குழலும்
வார்சூழு மீர்தனமும் வளருகலை நுதலும்
  வருநறவின் சுவைமருவு வாலமரு விதழுந்
தார்சூழும் வேஙிகர்த டித்தவிரு புயமும்
  தழலுமிழும் வெயிலெனவே தயங்குமணி களமுஞ்
சீர்சூழுந் திருநீறுந் தேகமுழு துடையீர்
  சிறுபிச்சி யென்பிரேல்யான் சேர்பித்த ஞனேன். 46

### நேரிசை வெண்பா.

ஏணியாய் நின்ரு னெழிலார் திருவல்லிக்
கேணியா னம்மடியைக் கேண்மையாற்—பேணிப்
பணிவோர்வை குந்தப் பதஞ்சேர்வர் சேரா
ரணியாரை பாத மகத்து. 47

### கட்டளைக் கலித்துறை.

அகமுடை யல்லிக் குளத்தினர் பாத மகத்திடத்திற்
புகவள ரன்பொடு பூசனை செய்பவர் போயருகார்
மிகமிக நாதபு:வன்கணர் வீழ்ந்துழல் வன்னிரய
மிகசுக முற்றிப் பரகதி யின்புட னேகுவரே. 48

### நேரிசை ஆசிரியப்பா.

இன்புறு மூவர் துன்புற வொழித்து
முன்பெரும் பாரதம் முடிக்கும் வண்ணம்
நரன்றே ருரும் நாரண ஞகி
யத்திருக் கோலமோ டல்லிக் கேணியின்
மெய்த்தவர் பணிய மேவிய நெடியோய்
நசைதரு நின்பதம் நனிபெற நாடி
யசைதரு புன்கணர் திசையிரு நான்கு
மிருந்தோர் குழுவி யெம்மருங் கிசைப்பப்
பெரும்புகழ் சார்ந்த விருவினை யதனி
லொருவினை யண்டா தீவினை யுற்ற
வுறுக ஞள ருவப்புற வயங்கி
யிவ்விடந் துறந்திட் டவ்விட மேக
நவ்விடப் பெருந்துயர் நவிலொணுப் பாவ

மீட்டம் பன்முறை வாட்ட மயங்கி
நீட்டம் பதமலர் நிலையெனத் தெற்றி
யேறுதற் கேணிபோ லெழில்பெற நின்ற
வேருறு பத்துபத் திதடா மரையனுங்
குலிசனும் முதலோர் குறித்திடும் பெரும
நலிசெயு மந்தக னுளெண் ணுவித
மருளல் வேண்டு மண்டர்கட் கிறையே
பெருகிரு ளகத்தமம் பிறங்கிடும் மூர்த்தியே
கத்து கடற்றுயில் கடிவடச் சேக்கையாய்
நத்துடன் றிகிரி நயந்தணிந் தவனே
மஞ்சி னிறமணி மாயனே தேவே
பஞ்சவர் தூதா பத்தருக் கெளியாய்
நெய்யா ரறல்புரை நீடிய கூந்தற்
செய்யாள் கணவா சிறிதருள் வையேற்
கரியைக் காய்ந்த கரியா
யருளின் கரியா யமைகுவ னிவணே. 49

## தவம்.

### எழுசீர்க்கழிநெடிலடி சந்தவிருத்தம்.

ஏகாச மண்ணெனவே யேகாந்த மேகியென
யேகாங்கி யாயென்க மிசைவாலே
யாகாச கங்கைகோ தாவிரிகா வேரிமுத
லாறுபடிந் தேதுபய னடைவீரே
மீகாச முற்றுநலி மேலெழுவ தாகியுடன்
மீளுவதி லாதுசுக மிடையீரே
நீகாச மற்றவலிக் கேணியுறை நீண்டவர்த
நீதமிகு பாதமக நிறுவீரே. 50

### தாழிசை.

ஈரேழு புவனங்க ளெழுந்தோங்கு முடியா
ரீரிரண்டு மறைகடமை யிசைக்கின்ற வாயார்
காரேழு மழைபொழியக் கவிகைமலைக் கரத்தார்
காரேன மாயுலகைக் காக்கின்ற வலியார்
சீரேழு சுரங்கனியச் சிலைக்கின்ற குழலார்
சீர்மையுடன் றுயில்கைக்குச் சிரங்கப் பதியா
ராரேழு முனிவர்தொழ வருள்கின்ற வடியா
ராசைகொளும் நெடுங்கோயி லலிக்கேணி நெடியார். 51

## மடக்கு.

### பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நெடியவர் மேவும் பதியலிக் கேணி
நித்திய ரேறுதற் கேணி
கேகயங் கூவ வடைந்தது குளமே
நின்றது நீர்மைபொங் குளமே

தடியவர் சிறித் தடிந்தத சுரரே
தண்மையாற் புரந்தது சுரரே
தன்னமா புரக்க வெடுத்தது வரையே
தாங்கிநின் றதடிய வரையே

யடியவ ரளந்த தகன்றமுப் புவன
மடைத்தது பெருகுமுப் புவன
மழித்தது மலைந்த கஞ்சகுஞ் சரமே
யரியட வெடுத்தது சரமே

கிடியவ ரணிவில் சங்குசக் கரமே
கிட்டிய தத்திந கரமே
கிளர்ந்தது முற்று மழிக்கவி பதமே
கீழ்பவ நீக்குதல் பதமே. 52



### நேரிசை வெண்பா.

பதங்கனிந்து சங்காழி பண்புறுமெய் சூல்ச
ரிதமித்தன் மையுடைய வேந்த—னிதமுவப்பக்
கூடவரு வேனென்றார் கூப்பிட்டுங் காணேன்மால்
கூடவருங் கூடுவரோ கூறு. 53

## மறம்.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கூறுமொழி யஞ்சாது கூறுகின்ற தூதா
கூறுகின்றோங் கேளடநீ கோமொழியு ரைத்தாய்
வீறுகின்ற கைரவிணி மேவிநின்ற மாயர்
வெற்றியரு ளுற்றபெரும் வின்மறவர் யாமே
பேறுபெற வென்றறைவாய் பெண்மகளைப் பூவை
பெருங்காயா மரமாகிற் பெருஞ்சோலை யண்டே
பாறுமருள் வன்னியெனிற் பணைப்பனைய டர்ந்த
படரடவி நெடிதேகிப் பரிந்துபிடித் தோடே. 54

இதுவுமது.

ஓடாதே நில்லடீ யுண்மைமொழி கேளு
வுரைத்தமொழி குயிலாகி லோங்குமலை யேகு
சாடாதே நின்மொழியுஞ் சாரிகையா மாகில்
தருச்செறிந்தி லங்குபெருந் தண்டலையிற் றேடு
நாடாதே யிதைவிட்டு நங்குலத்துப் பூவை
நயக்கும்பூ நும்மண்ண னூர்பொருந்தும் பூவே
பாடாதே நும்மிறைவன் பஞ்சனென வறிவோம்
பறக்கடிப்போம் கால்பிடரி படவிசையி லோடே. 55

அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஓடியோடி யுலகெங்கு மோடியோடிக் காணுமற்
றேடித்தேடித் திரிந்தேனென் செல்வா வல்லிச் சீர்கணவா
பாடிப் பாடி யுனதடியைப் பற்று தந்தோ பலனழிந்தேன்
சூடிச் சூடித் தொழுவதற்குத் தோன்றாய் குல்லை வனத்தானே. 56

மடக்கு.

இரங்கல்.

எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.



வனைமருவு மரையே வழங்கியத மரையே
வரந்தோன்றுஞ் சலமே வந்ததுசஞ் சலமே
நுனைமருவுங் காசை நுழைக்குஞ்சங் காசை
நுவலெழுமு திரமே நுந்துசக்கு திரமே
கனையுறுவா ரணமே கடவிடுமா ரணமே
கயமுறையம் பணமே காணுதனம் பணமே
மனையிடமுங் குளமே மயலதுதங் குளமே
மதுவமரு வாயே மாந்தவருள் வாயே. 57

எண்சீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்.

அருளொன் றிலரே யருங்கா தலரு
மமைவார் புயமு மழகார் தனமு
மருளொன் றிலகும் வனமீர் விழியும்
மணமார் குழலும் மதுவா ரிதழும்
பொருளென் றுறையும் புனைமார் பகமும்
பொலமா ரரிசொல் புகழார் மொழியுந்
தெருளார் சகியே மகளார் தொழுத
சிலையார் பேடித் தேரூர் வலரே. 58

மடக்கு.

மதங்கி.

பதினொன்குசீர்க் கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வலம்புரி வதியும் மால்சின கரத்தில்
வருவைநீ வாள்கொடு கரத்தில்
வலவரைநாளும் வணங்குமா தங்கி
வளைமணி யணியுமா தங்கி

நலம்புரி கூத்து நடமொடு வணங்கு
நாடிடி லெழி லுறு வணங்கு
நாமநீ ளக்கி நலிகொடு மாவே
நவில்பதம் நிசரிக மாவே

சலம்புரி பறம்பு சலிகைமா சிலம்பே
சலவென வொலிப்பது சிலம்பே
சாரமார்ந் திலகிச் சமைந்தது முத்தஞ்
சவியமர் தசனமம் முத்த

மலம்புரி களரி யமலமார் சங்க
மலவனைப் பழிப்பது சங்க
மகமொடு விரும்பு மழுங்குமிங் குளமே
யமர்வது திருவலிக் குளமே. 59

ஏகபாதம்.

வஞ்சித்துறை.

அலிக்குளப் பதியே
யலிக்குளப் பதியே
யலிக்குளப் பதியே
யலிக்குளப் பதியே 60

பதினொன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பதியுமிழ் குழையார் பாதிரி யிடத்துப்
பரிவமர் கேரளை யிசைத்துப்
பத்திரை யழைத்தாய் பருந்தக ரகவப்
பரிந்தவ ணீண்டினிற் சென்றாய்

சதியெனுஞ் செய்யாள் சங்கிரத் தரிணந்
தகுளம மையுமெனத் தொடர்ந்தாய்
சந்திர கியெனுந் தாரநின் வேண்டச்
சசிபதி தருவிவண் கொணர்ந்தாய்

விதியெனு மெய்யன் வீறிட வுந்தி
வீசினை வெறிப்பயங் குடித்தாய்
விசித்திர மார்க்கோ வியர்மிகப் பருக
வியனரக் கிதழ்நனி கொடுத்தாய்

கதிகொடு கயிர விணிப்பதி யுவந்தாய்
கவல்கொடு புன்மனந் திரித்துக்
கடியெனும் பொல்லேன் களிகொளச் சிரமேற்
கவினடி சூட்டனின் கடனே. 61

### கட்டளைக் கலித்துறை.

கடமுற வான்மொழி காதினுற் கேளேன் கவல்கொடுவி
கடமுற நிற்பன் கலவேன் பதப்பூ கரையகல
கடமுற நைந்தேன் கலுழா விதமெனைக் காவடுச
கடமுற வல்லிக் குளவளர் காரார் கடல்வணனே. 62

### சவலை வெண்பா.

வண்ணங் கறுத்தவர் வானல்லிக் கேணியார்
திண்ண மருள்பொழியுஞ் செல்வர் காண்
மலைவளைத்த பித்தனுடன் மல்வளைத்த வேளே
சிலைவளைத்து வந்ததெவன் செப்பு. 63

### மடக்கு.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

செப்பு வான்மறை செப்பு வாயுடைச்
சித ரன்புகழ் சித மக்கின
னுப்ப டைத்துவி ருப்ப கன்றவ
னுலகை யுண்டவ னுலகை நின்றவன்

றப்பி கந்துமி தப்பி ருந்தவன்
றண்ட மேற்றுவே தண்ட மேந்தியே
யப்பு மண்ணின னப்பு வண்ணன
வல்லி மணையினன் வல்லி மணையினன். 64

### களி.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மனையாப் பிருந்தா வனமுறுவார்
மாயர் புகழ்துதி களி யரியாம்
மதுவே யுன்சுவை யென்சொலுவேன்
மதுரை சிறந்ததென் றறிந்தலவோ

நனையார் பெண்ணையை மகிழ்ந்தணைவார்
நலமுள தென்றுமே யாடிடுவார்
நளிருங் காலியா னிலையடைப்பார்
நவிலுந் திருமந் திரமுவப்பார்

முனையார் பாளையஞ் சிவிநிற்பார்
முருகார் சீதைகா ணுவயர்வார்
முனைவன் பனையடு சுழிகையார்
முகத்துக் கொள்வது கலமளியே

பனையாம் வீடுறைச் சான்றோர்யாம்
பழிச்சுஞ் சுரரிறை செயனலமே
பகவ னருணமக் கென்றுமுள
பருகுங் கண்ணல மேநலமே. 65

நேரிசை வெண்பா.

நலஞ்சே ரலிக்கேணி நச்சிநின்ற சூதன்
பொலஞ்சேர் கழலிணைகள் போற்ற—மலஞ்சேர்
மனவழுக்கு நீங்கும் மறுபிறப்புத் தீண்டாக்
கனமருகு மத்தி கரி. 66

மடக்கு.

பதினான்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

கரியவன் கரியைக் காய்ந்தவன் காய்ந்த
கஞ்சனைக் கஞ்சனை விதித்த
கன்னியன் கன்னி யமைத்தவ னமைத்த
கன்மியன் கன்மியர் களிக்க

மரியையன் மரியை மருவிலான் மருவின்
மாதவன் மாதவத் தோற்கு
மலரவன் மலர்ந்த மலரிடை மலிந்த
மகமுறு மகபதி தனக்கும்

பெரியவன் பெரிய முனிதனை முனிந்த
பெருகடல் பெருகடல் வணத்தன்
பின்னைகோ பின்னைக் குழலினள் குழலான்
பெருமையன் பெருமைய மிடுவோன்

பரியவன் பரியை மதித்தவன் மதித்த
பரவையன் பரவைய னல்லிப்
பதியினன் பதியாய்ப் பொலிந்தவன் பொலிந்த
பணியினர் பணிகுவந் தினமே. 67

நேரிசை வெண்பா.

பணிவதற்கும் பாடற்கும் பார்த்தற்கு நேயா
லணிவதற்கு மடுத்தற்கு மன்பர்—தினியார்
சினகரந் தாள்கண்ணு சென்னி யுளதே
மனமே வருந்துவதென் மற்று. 68

மற்றெனப் பிறவி முற்றிய வுரவோர்
தெற்றென வுணரத் திருந்திய கோலத்தாய்
துன்பமு மின்பமுந் தொடராப் பதவியின்
மன்பெற விருத்த மதியருட் செய்யே
நன்மையொடு தீமை நாண்முத லறிந்த
பன்னகத் துவசப் பார்த்திவ னளித்த
மன்னே யிப்புவி மன்னிய பெருந்துயர்
கணங்கொடு சேர்ந்துருக் காட்டிய தென்ன
நுணலென வாயுறு பணியி னுணங்கித்
தாங்கா நல்குர வோங்கா வடர்க்கப்

பூங்கா வலிக்குளப் புனிதனே நின்னை
யுணவிலப் பன்னா ளூறுகண் டாக்கித்
தணலெனப் பசிநோய் தண்டா தெழும்பக்
கவலுறு மனத்தனாய்க் காலக்கு தேயக்
கலமுறு தயிரெனக் கலங்கி யந்தோ
வலைந்தேன் மணிமுடியும் வெயிலென வலருங்
கிலிகொடு நாந்தகம் வேலு மளிசூழ்
கண்ணியுஞ் சாத்திய வாகுச ரடுத்தே
யமரர் தருவே யளியின் புயலே
யெவருமக் குவமை யென்றுபல வாடியுஞ்

சிறுகாசு பெறாது பெருங்காசை யுற்று
மறுவார் பணிதலின் மன்னரை யுயிரொழித்
திடுவது நலனெனத் தேர்ந்திடு தீயேன்
பத்துபத் தீரிரு வீரிரு பதியினி
லுத்தமர் தொழத்தகு நத்தவ நீடிய
நின்பதி யம்ம நீளழ கார்ந்த
பொன்பதி யுறைவோர் பொற்பெழுந் துட்புக
மூடிடிற் சற்றே யோடிடுந் தொய்ய
லென்றே கண்ணிணை யிமையா திருந்தன
ருலகஞ் சுமக்கு மொண்முடிப் பாந்த

ணிலவிய பஃறலை யெழிற்கண் டசைத்தெனத்
திரைவளைச் சங்கார் தீங்கனி புளிக்கும்
பரைபதி தாதா சதிபதி பலருங்
குழுவினர் நோக்கக் குனிச்சடை யணியெனக்
கழுவிய பாதக் கமலதீர்த் தமென

வெழுபெரும் புயலு யெண்மர் புரந்தரூஉம்
பதிவிட் டிவணே பதிந்த தென்ன
வவரொளி கரக்கு மவிரொளி நீடிய
கேணி பதிபாற் கிளரன் புள்ள
நான்முக னாவுறை வேய்புரை மென்றோட்

காதள வோடிய கருங்கட் கடலி
னறல்புரை கூந்தல் வாணியும் பாதம்
பணிந்தன ளென்றுவப்ப ணின்பா னீங்கா
வைகும் விமலை யலையுரு வவளுரு
வாதலின் வெண்மை நிறம்பற்றி யுவமை
செலுவினி லடக்கினன் செறிந்தபன் மீனெலா
மீனா யுதித்த வந்நா ளென்றே
யுணவிலா தயர்ந்தே யுறக்கந் தாங்கு
நாரை நிற்குளம் வெறுத்துமே நாடா
தெனினு முன்னா ளிருங்கரா பற்றக்

கூவிய கரியை யளித்தன னதனா
னந்துயர் நோக்கி நலியுறு வுணவிலா
ததனா னல்குர வொழிப்ப னென்னக்
களியகங் குதிகொளக் கவலுறல் விட்டுக்
குளவளை கற்படி துஞ்சு மடுத்த
தண்டலை யம்ம தத்தைக்குக் கீதப்
பயிற்சி செய்யு மாங்குயிற் குழுவு
மிடைவிடா தெழுவுறு வேள்வியிற் புகைய
தெழுபுயல் துரவிற் படிய வைத்தன
மணையாப் பொருந்துவ னார்க்கு மணையா

னாகையாற் றோல்வி யடைந்த முகிற்குலம்
போர்வா யெழுப்ப வேண்டி யெழுப்பச்
சுமைத்த னென்னக் கலியார்ந் தெழுந்த
தவைகளை யடர்த்த னமது கடனென்று
குழுவிப் பகைக்குல மேலெழா வணமே
பரவிய ததுகண்டு மேகமே செறிந்த
தந்தோ வெனவயிர்த் தறவே நடுங்கி
வாயடைத் தனகிளி யதனாற் சினத்து
முன்னே நம்மைத் தன்னிறத் தாலே
யழித்தது மிக்குளம் பயிற்சியு மிச்செவி

தவிர்த்தது நாமிவண் டங்குத லாகா
வென்று விண் ணுற நம்பகைப் பருந்துந்
தங்கிய திங்கா தலினுற் பின்பு
நம்மொழி யின்பம் நயக்கு மென்றே
சொன்மொழி நம்மொழி திருவி னம்மொழி
கேட்டுவப் பனல்லார் தண்டலை மீட்டுந்
தங்குங் கிட மிமிழிசை பாடப்
பல்கதிர் வீசுதோ கைசெறி கேகய
ம துகேட் டந்திப் பொழுதினு மாடா து
நச்சிசை கேட்கப் பணமகல் விரித்துப்

பெயரா து பருகு மரவினை யீரு து
துஞ்சும் மலயச மகரு பாடலங்
கேசரங் கோங்கு சண்பக நாக
நாரம் வழைவா சந்தி மாலதி
கருமுகை திலகம் மருகு மௌவ
லனங்கங் காசை குல்லை பஞ்சரங்
துருக்கஞ் சுள்ளி தமனகம் வேரி
தேக்கை வலம்புரி புற்பதி தாலங்
கோலம் பநசம் மாந்திசே தாரந்
தாழை யரம்பை செயலை சுவலை



கடுக்கை கிஞ்சுகஞ் சம்புசா தேவ
மெண்ணற் கரிதாம் பலதருச் செடிவகை
யடர்ந்ததாய் பார்த்த னடுபரி யோட்டிய
வலவனுர் கோயில் வளைந்தது;சிறப்புடைத்
தத்திருப் பெருமையா ரழகார் தளியிற்
கண்டன னென்னிரு கண்க ளார
வாடிய புன்மொழி யையனே மடுத்துமிக்
கருள்செய் வையே லப்பனே யடிமை
நின்னடி பணியும் பெருவடி யார்யா
பொற்பதத் துகட்கும் பொருவிலா நாயேன்

மாறுது வருகின்ற பிறவி வேண்டே
னெக்குற்ற மிழைக்கினு மின்சொன் மழலை
பயிற்றுங் குழவியை யன்னையளிப் பதுபோ
னீயே யளித்து நின்னடி தந்து
யான்செய் தொண்டின் வருபயன் கொண்டு
நித்தியர் தம்மொடு நிலையப் பண் ணுவாய்
சின்மொழி குறித்த படியே
நின்பதம் போற்றி நெடிதுவாழ் குவனே. 69

### கட்டளைக் கலிப்பா.

ஏசி யார்பெருங் காவலிக் கேணிய
  ரேறு நேமியர் நீருறு மேனியர்
வாசி யோட்டிடும் வானிறை வாழ்பதி
  வாழும் வீறினர் வாரகி வேடரங்
கேசி யார்மனை போன்றலாற் பேணுவள்
  கேசங்காவினர் கேசரஞ் சூழ்ந்திடு
மாசி நேர்ந்தவ ராசியம் வான்பிறை
  யாமற் றேளின ராழிய ராணியே. 70

### பாண்.

### பதின்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏத்து மேழிசை யேற்றி யிசையுறு மாகதனே
  யேம மாகரி யிசைக்க விசைத்திடு மின்னிசையாய்
பூத்த வராளி பூக்கும் பைரவி சீராகம்
  பூட்டு வீணையைப் போற்றும் பொற்குளக் காதலரை
நீத்து வாணுத னீடு மனையினி னீவருவாய்
  நீடு பாணனர் கோதி வெஞ்சமர் நிலையிடுவா
ரோத்து நேடுவ ருன்பா லுழையினை யோதினரோ
  வோது நின்னிசை மிகநன் றேயினி யோர்குவையே. 71



### நேரிசை வெண்பா.

நன்று கயிரவிணி நாத னடிபணியா
தென்றுமிருப் பாய்வாழி யென்மனனே—தொன்றுபுகழ்
நத்தாழி தண்டம்வின் ஞந்தகஞ்சேர் கையானை
யத்தானை யண்டுவகை யாடு. 72

### காலம்.

### மடக்கு.

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஆகுளத் தேபலபூ வீசிவருங் கால
  மாழிமுர சோன்பலபூ வீசிவருங் கால
மாடுமயி லினங்கூடி யகவலிக்குங் கால
  மாட்டுமய லினங்கூடி யகவலிக்குங் காலங்
கூடியெழும் பயோதரமுந் தடித்துவிடுங் காலங்
  கூடியெழும் பயோதரமுந் தடித்துவிடுங் காலங்
காடுதுறந் தரிகளும்ப தணந்துயங்குங் காலங்
  கயிரவிணி நாதரையான் றணந்துயங்குங் காலம். 73

### இடைச்சியார்.

#### பதினறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

காலிலியு கைக்குபரிக் கனலிவிடு கடிபோன்
காதம்ப மீதேறிக் கமலமுறு விதியே
ககனபுவி மேவிகிரிக் கனக்குரலே யறவே
கவினழியக் கறுகிமிகக் கடிந்தவனு முதலோர்

பீலிவளைக் கயிரவிணிப் பெருந்தளியி னுடே
பெட்பினெடு கைகுவித்துப் பிழையிரக்கு மொலியே
பீடுசேனைமுதலி பிறங்குபிரம் படியே
பெறமுதுகி லாற்றுது பிளிறுபெரு மொலியே

நாலிகொழி யுததியென நரற்றுகிற பதியே
நாடிநிற்கு நாரணனை வளர்த்தவிடைக் குலமே
நயந்துதித்த சிறியவிடைப் பெரியவிடைக் கொடியே
நலங்கொண்மார்க் குடமுமோர்க் குடஞ்சுமந்து வருவா

யாலிலையிற் றுயில்கொளுமன் னச்சுதனுர் வரினு
மாடைநீக் காயபய மளியாய்நின் றதியே
யவணிவண்சும் மாவலேந்தா லழியுமென்ப தோரா
யருமச்சி கையென்று லாச்சுதையென் பாயே. 74

### வண்டுவிடு தூது.

#### பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏருற வுலவி யென்றுயர் சால
வேறிட வைங்கணைக் கிழவ
னேவிடு மேவில் வாரிச மயக்க
மிருநிறை கவர்ந்தது சூத்ச்
சீருறு சிந்தா குலமது நாணைச்
செவ்வையி னழித்தது முலைவ
சீகர ணமறி வைகெடுத் ததுவே
செயலையா மதனமுங் துயிலைச்

சூருற முற்றுங் துறந்தது பானற்
றெடையது தொடுத்தில னினமுஞ்
சூதமே யதனு னின்றது செந்து
துயருறென் செயலெலா மிசைத்துக்
காருறு கைர விணியரு ளவர்க்குக்
காட்டுநற் கடிசரங் கொணர்ந்து
காமுறு மனத்த ரளியெனக் கழறல்
காரணக் குறியெனக் காட்டே. 75

காட்டிய கோலங் கமையொடு தயையும்
நீட்டுவா னந்த சத்தியிற் பொலியும்
நிலமக டிருமக ணீளா தேவிய
ரிலகநின் னிருபா லிருஞ்சுத்த சத்தி
னாத்தும சொரூபி வயங்கரித் தவிசா
யேத்துஞ் சமத்த வெழுதாக் கிளவியின்
மயமா யிலங்கி விகங்கபூ பதியெனும்
பெயரோன் பதியாய்ப் பிறங்கிடச் சீவ
வாத்தும வபிமா னாதி தேவதாச்
சொரூப மென்னும் நிருமல வாத்தும

விரத்தினங் குயிற்றிய வெழிலா பரணக்
கவுத்துவ மணிகழி கவினுற வெல்லாச்
சனமனோ கரமோ கனவா கார
வவிரொளி நீடிய திவ்விய மங்களஞ்
செவ்வையின் மல்கிய தேவதாச் சொரூப
வப்பிர கிருத வட்டசம் பத்தெனச்
செப்பிய பீதாம் பரவணி யழகெழ
சகல சகத்தி னாதிகா ரணமா
யுகை மாதா வுறையுறுந் தலமாய்ப்
பிரகி ருதியெனும் மறுவு மோர்பாற்

சிறக்க புத்தியின் தத்துவ மாகி
நிலைபெறு மகத்துவ தத்துவங் கவுமோ
தகியாழ் வானெனுந் தண்டொரு பக்கமுஞ்
சோம்புபே ருண்டி நெடுந் துயின் மறதி
நீதியோ டொழுக்க வழுவொடு வஞ்சங்
கோபங் காமங் கொலையொடு பொய்யெனுந்
தாமத வகங்கார தத்துவம் பாஞ்ச
சன்னியாழ் வானெனுங் சங்கொரு பக்கமும்
பவன னாதியர் பிற்படு மதீத
வேகங் கொடுதிரி சமத்த சோதிக்

காலப் பொருள்க ளுறைவிட மாகித்
தேவதை யுருவ மாகிச் சருவ
பாவபுண் ணியங்களின் காரண பூதமா
மனமென்ப தற்கதி தேவதாச் சொரூபியாஞ்
சுதரிச னாழ்வான் றாயசக் கரமொரு
பக்கமு ஞான வருளொடு தவம்பொறை

வாய்மை மேன்மை மோனமு மெய்வாய்
கண்ணொடு மூக்கு செவியெனும் பஞ்ச
பொறிகளை யடக்கு றூஉந் திரமாஞ்
சாத்துவி கவகங் கார மென்னு

மேத்திடும் வீரத் தத்துவ சொரூபச்
சாரங் கப்பெரு மானெனும் வில்லொரு
பக்கமு மழகெழ வானெரி யறல்கான்
மண்ணெனு மைந்து பூத வுருவ
முத்துமா ணிக்க மரகத நீலம்
வச்சிர மணிமா லிகையெனுஞ் சோதி
யீட்டம் முற்றிய வெழில்வன மாலை
யழகெழ ஞானக் கருமமிந் திரியக்
கணைகளும் ஞான மயமாம் வேதமாந்
தத்துவ பூத மெனுமத்தி யந்த

நிருமல வொளியி னிறமாய்ப் பிறங்கும்
நாந்தகாம் வானெனும் வாளொரு பக்கமு
மத்தி யந்த வவித்தையே யவ்வா
ளுறையு முறையா யுற்றிடு பான்மையுஞ்
சிறக்கக் கண்டேன் சிறுவனே யம்ம
''அம்பர மும்பெரு நிலனுந் திசைக
ளெட்டு மலைகட லுங்குல வரையு''
முட்கொணீ கரையக லுவகைக் கடலிற்
றிளைத்தேன் பின்னர் நீங்குமோ வென்னு
மவிசு வாசம் வன்மன மண்ட

வயர்ந்தே னிவ்வணந் தெளிந்துபின் னயர்ந்து
மாயையின் கட்டாற் பேதுறு மனத்தை
யோர்வகை நிறுத்தல் வலிதோ வுரையா
யெழுசா கரமு மிவணே யிருந்தென
வெழுமுகிற் குலங்க ளிழிந்தே கார்த்திகை
மதியிற் கிருட்டின பட்சத் தட்டமி
திதியிற் சிரார்த்தஞ் செய்பவர் பிதுரு
வீட்டினை யடையும் பெற்றியைக் கொடுக்குங்
கயிரவி ணியசுவத் தானஞ் செயற்குறு

முத்திர பூர்வ திசையினிற் பொலியு
மிந்திர தீர்த்தங் கிர முசரு
கோசிகம் வெண்ணெய் கொடுத்தற் கிசையுந்
தெற்கிற் பொலியுஞ் சோம தீர்த்தம்
நாவிவித் துருமம் பிரசமா கார
மளித்தற் கியையுந் தென்மேற் றிசையுறும்

மீன தீர்த்தம் வடமேற் கண்ணே
யசதா னஞ்செயும் பெற்றியின் விளங்கிய
வக்கினி தீர்த்த முத்திர வாசையி
லெவ்வகைத் தானமும் வீடுற வழங்கற்
குரிய விட்டுணு தீர்த்த மைந்தினும்

படிந்து முகந்து சுற்றிய வரணைக்
கோவென மயங்கிப் பொழியும் பெருமழைப்
பெரும்பதி நின்ற பெருமநீ யற்றை
வியாசன் சங்கம் வலக்கரந் தான
முத்திரை யிடக்கையிற் பிரமா ணப்படி
யமைத்த வுருவி லருளிக யிரவிணித்
தீர்த்தமேற் கரையிற் கீட்டிசை நோக்கி
யுருக்கு மணிபல ராம சாத்தகி
யநிருத் தாழ்வான் பிரத்தியும னிவரொடு
பொருந்திப் பேரருள் பொழியும் முகிலே

யிருவிபூ திக்கும் முதல்வனே வேத
வல்லியோ டகமகிழ் வாசு தேவனே
யொப்பிலா மாலே யுலகெலாம் புரக்கு
மப்பனே யுன்பக்க லருத்தி யுறுத்திடிற்
சனனமு மரணமும் தாண்டி
நினது பதத்தி னீடுவாழ் வேனே. 76

**நேரிசை வெண்பா.**

வாழ்ந்தேன் வெறுமனமே மற்றுநீ யென்செய்வாய்
வீழ்ந்தே னவனடியில் வீழ்ந்துமிகத்—தாழ்ந்தே
னவன்புகழைப் பாடினே னுடினே னண்டி
யவனடியைத் தந்தா னறை. 77

**சித்து.**

**தாழிசை.**

அறையுமாவலை யண்டுசக்கிரி யவிரும்பொன்றிணி யிந்தமா
வழகுடைப்பதி நின்றவச்சுத ரருள்மிகப்பெறு சித்தர்யா
முறையுவாயுறு மண்டிகல்லினி லொளிருவல்லரி தன்னையே
யொப்புமையில வென்றுமெச்சிய வுயரனந்தமாச் செய்குவேம்
இறைபிதாமக னின்றுதன்குறை யியம்புவன்றுயர் சிந்தமா
விரருளைப்புரி சம்புதன்னுர மிலகுபொன்னுறச் செய்குவேம்
பிறையின்கோடுறு கும்பிதன்னையும் பிறையணிந்தருள் பித்தனுர்
பிறங்குடம்புமா தங்கமாக்குவம் பெரிதெமக்கொரு வித்தையோ. 78

### பதிஞன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

வித்தினின் றுதிக்கும் பூருக மாதி
வித்துமே கோடரத் துதிக்கும்
வித்தினின் மாறி மாறியே யண்டும்
விசலனப் பிறவியைத் துறந்து

துத்தியி னனந்தன் றுயில்கொளு மாயா
துன்பமு மின்பமு மற்று
துங்கமத் தொடுக்கம் வரித்திய சுடரே
துரகதத் தரணியிற் பொலியும்

பித்தியிற் சேடு பீடுற வமைந்த
பெருந்தளி நின்றருள் பார்த்தன்
பெருமய முகைத்துப் பிருதிவிக் குருவைப்
பெயர்த்தஞர் மாற்றிய வலவா

முத்தியின் கரையாம் வீட்டி னிலழியா
முதையடைந் தின்புறுங் காலம்
முற்றுமே கயிர விணியமர் முகுந்தா
முருகவி டுளவணி யிறையே. 79

### வண்ணக்கலித்துறை.

தனதத்தத் தனதத்தத் தனதத்தத் தனதத்தத் தனதாஞ

இறையற்றுச் சிவமுற்றிக் கவினல்லிக் குளமுற்றுப் பொலிவாயே
துறைநிற்றிக் குறைசுட்டிக் கவினக்கிக் கயவிட்டுத் துயராமே
சிறைசுற்றுத் தளிகிட்டித் துதிசொற்றுத் தூனிசெற்றத் திரியாதே
கறைபெற்றுத் துயர்முட்டித் தளர்வுற்றுச் சுழலுற்றுக் கவல்வாயே. 80

### தாழிசை.

ஏதுநான்சொலினு மெழிலியார் பொழிலி
னேத்துடைக் கயிர விணியநால்
வேதநான்முகனை விதித்தவா தளியின்
வீறுறு வலவ விமலனே
காதிஞல்வினவிக் கருணைவான்பொழிவை
கானவர் நுரையுணுவயாற்
கோதுசேர்விபுலை யமரியாம்படியுட்
கொளல்புரிந்தனையெ னனிசமே. 81

### எழுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

நிசங்குலவு மந்திரமு கந்தரிவ மூங்குபரி
முந்திவிடு நந்தன் மகவே
கசங்குளவ ருந்தவலி டங்கருபி மூங்கவரு
டந்துவிட வந்த வளியாய்
குசங்குலவு தண்டலேவ ளந்தருபி ருந்தைவன
நின்றுதயை சிந்து விழியா
யெசங்குலவு டம்பினன்ம லஞ்செறிவ னெஞ்சினன்ப
டுஞ்சிலுகு சிந்தி யருளே. 82

### மடக்கு.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏரம ருங்கா மனப்புள்ளே
யேகும ருங்கா மனப்புள்ளே
யிசையுறு வங்கம் படர்படவே
யிசையுறு வங்கம் படர்படவே

காரமை செல்லா வகத்துப்பே
கையமை செல்லா வகத்துப்பே
கழியுற நச்சு குருகனமே
கழியுற நச்சு குருகனமே

மாரன்க டுத்தலேக் கண்டலமே
மயல்மிக்க டுத்தலேக் கண்டலமே
மண்ணனல் மிகுவங் திருமலரே
வருத்துமின் மிகுவங் திருமலரே

பாரஞ்செ றிந்துள மண்மிசையே
பதரும றிந்துள மண்மிசையே
பார்த்தன் பாக குருகுவரால்
பார்த்தன் பாக குருகுவரால். 83

### நேரிசை வெண்பா.

ஆலியெனு மாறருரை யந்தமிழ்சேர் வேதமெனு
நாலினையோர் காலத்து நூனமெனப்—பாலியாய்
நாறுவங் குல்லேவன நாத னடிபணிந்து
வீறுவ தெந்த விதம். 84

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரியச் சந்தவிருத்தம்,

விதம்படும ரங்களடர் விண்ணுறவெ ழுந்தே
வியன்பெறுபி ருந்தைவன நின்றருள்வ லவனுர்
சிதம்படுந லந்தணர்வ ரக்கைவிசை யற்கே
தெளிவுறவி ளக்கினனி தந்திருள்கெ டுத்தார்
நிதம்பணியு றிந்திரன யன்முதலெல் லவரும்
நின்றனர ருள்பெருகி நித்தியன்ப தத்தே
கதம்பெருப டுக்கையின்க ணிந்தவன்பு ரப்பான்
கத்துகரி யன்றுடன்பு ரந்தவனு மன்றே. 85

### மடக்கு.

#### கட்டளைக்கலிப்பா,

அவன்வி ரும்பணி யாமத்திகிரியே
யவன்மு னில்பதி யாமத்திகிரியே
யவன்றி ருட்டியுஞ் சேமம்புயமதே
யவன்றெ ழும்பரஞ் சேமம்புயமதே
யவன்வி டுத்ததும் வாய்ந்ததுரகமே
யவன்ப டுக்கையென் வாய்ந்ததுரகமே
யவன்க டைந்தது மோதப்பரவையே
யவன்றி டம்முல கோதப்பரவையே. 86

### தழை.

#### பதினன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

பரவையிற் றுலங்கிப் பரியினை நீக்கும்
பண்புற திசுப்பிர நாவி
படரலைக் கரத்தா ஞயிலில் வீசப்
பரந்தவ ணுறையுறு நவிர

மிரவியிற் பொலிந்த திதுநம தரிட்ட
மென்றதன் மேலுறுங் குணமா
ரெழிலலிக் கேணி மதுசக னுட்க
விருந்தவ வாடிடக் கேண்மோ

முரலளி செறிந்து சாமளம் பழிக்கு
முறையுறு சவியமர் கிசிலம்
முதைமிக வளித்த நீர்மையா லுவமை
முனங்கவி மைதிலிக் களித்த

சரமுறு புட்டி ருங்கிய மிகுத்த
தரங்கொடு தரமமர் தவரான்
றடம்புய ராம னுழியே யன்றிச்
சாற்றலாங் தகைமைவே றுளதோ. 87

### மடக்கு.

#### பதினுன்குசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சாற்றிடு வலவர் தங்கிடம் பாடி
சலாம்பண்ணு வவர்சிறப் பாடி
தாமனு மிந்துங் தடிவளை வளையே
சார்ந்ததுங் திருவென வளையே

யேற்றிடு முதங்கட் சதமுநான் கிரே
யெழிலுற விவண்குரு கிரே
யிசைந்தது மண்ட ரியல்வளர் குலமே
யெடுத்ததுங் கதழ்வுதங் குலமே

வீற்றுட னெடுத்த தலைவளை தரையே
விழுங்கிவெட் டியதுசி தரையே
விபுலைதி திக்கக் கொடுபுதை சிதமே
விசையனுக் குரைத்தது சிதமே

காற்றுணுஞ் சேடன் கண்வள ரிடமே
களிப்புறக் கொண்டத ரிடமே
காய்ந்தது முன்க னகனைச பதியே
கயிரவி ணியருளும் பதியே. 88

### தூது.

#### இருபத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

ஏதியா னுட லேசியை விடுத்தே
னின்றுரி சியம்புமென் றெண்ணி
யிருசிறை தொறுவு மிலலிதர் மொழிகேட்
டென்னையு மறந்தது நெடிய
வெண்ணுசிக் கோணம் பாடலக் கழலி
னெழிலுறு கொய்யடி யசுவ
விந்திர தீர்த்த வகுலியைக் குத்தி
யிருந்தது பிகமரி போன்று

தீதுறு கலுடி சிலுகெடுத் தோதாத்
தீங்குரல் பயின்றது கடகத்
திட்டிதூ தணமுஞ் சென்றில வவனே
சிறுமியு முய்யுமா றுளதோ
சில்லிக ளரியார் சாமமஞ் சிறையின்
றிகழுறு முகரமும் படுக்கைச்
சேடனைக் கண்டே யரவிதோ வென்று
தெளிகிலா திருந்தது சகியே

யோதிம நரைபோ லுயர்தட நாடி
யுலவியங் கிங்கிருந் ததுவே
யோதுவா ரில்லை தனஞ்சயன் கோடை
யுகைத்தவ ருணருமா றங்தோ
வுறுகணும் பின்னே யுயிரினை யுரிஞ்சு
முருவிலி கணையதால் வந்த
வுண்மையே தோழி யாதலா லேகி
யுயர்தட மாளிகை குழுவி

சீதுறு தொத்து பொதுளிவிற் கானற்
செறிந்துள வலிக்குள மணக்குஞ்
சேய்மைய வரிகக் கடுவரிப் பனசச்
சிதம்படு கூழொளி யென்னுஞ்
செழுஞ்சுளை கணையக் கிண்ணமென் கோலச்
சேடரித் துண்டமென் படிவச்
சீருறு சூதச் செழுங்கனிச் சாரார்
சிதரன் றூர்கொணர் வாயே. 89

### ஆசிரியத்துறை.

மாயர் மகனம்பே வந்ததிவ் விடஞ்சகியே
நேய ரவர்மனக்க னெகிழ்ந்தேமாலை நீட்டாரே
நேயர் மனநெகிழ்ந்து நீட்டுவ ரவர்மாலை
மாயர் மகனம்பால் வருந்தேலுனையு மணவாரே. 90

### தாழிசை.

அணைகளென்ற கரைகடாவி யண்டுமேக மோடவே
யதிர்ந்தநாச நாமவுந்தி யழுதுலர்ந்த விடனனுன்
றுணையெனென்று புணையிலாது யர்கடீர நாடியே
துதைந்துகோல துணரடர்ந்த விடரரந்தை வெருளவே
பணைமலர்ந்த திகிரியூரி பண்டுசேரு நாதனே
பறந்துபாத பாறுமுந்தி பழுதகன்றி டதிடமே
துணைகளென்று குறுகினேன்பவ வங்கடூறி யாள்வையே
சுடர்வெருண்டு படரிருட்டு சூழ்பிருந்தை வனமனே. 91

## ஊசல்.

### பதினாறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

எகசமன் கிலமின்றி யேமி யேவி
யிடர்செறியாஞ் சகத்தையரு ளீட்டி வாலி
யிறப்பாணை நிழன்மலிய மிலக்கம் வீசு
மேசுசிறி திலபலகை யெனவா மோதி

யோகவழி யடைதலின்றி யோர்வு மின்றி
யுலர்பத்தி யெனும்பழுதை யுனுவீ ரீர்பா
லொளிறவிசித் தோதிச்சிம் புளிய முற்ற
வொண்மையுற விட்கவிரித் துயர்ந்த மூவர்

பாகமதிற் பொலியவவர் பருதி வெம்மைப்
பணைமுலையங் குவடசையப் பனிவெண் முத்தப்
பாவையர்ம ருங்குலவிப் பழிச்ச வண்டர்
பதியொருபாற் றிகழூபெரு வடந்தொட் டாட்டச்

சேகரநான் காஞெருபால் வடந்தொட் டாட்டத்
தேவர்குழு வியந்தாடச் சேட னடைத்
தேர்ப்பாக ரோர்ப்பாக வாடீ ரூசல்
திருவல்லிக் கேணியரே யாடீ ரூசல். 92

### கட்டளைக்கலித்துறை.

சல்லிய மைந்தோ தழலெனக் காயத் தனுவதனிற்
சல்லிய மன்றித் தசையெலா மேகின சாவுறுமாற்
றுல்லிய மில்லாத் துடியிடை யென்கொடி சோருமனம்
வல்லிய மென்று மகிழ்ந்தவ னன்று மகிழ்ந்தணையே. 93

### தாழிசை.

நன்றுநன்றுக னன்றுகோலிய னங்கனிங்குகு தித்தன
ஞதனுடிய வுறுதிவாசக நலவுவாசுகொ டாதினி
துன்றுமென்றுமு னின்றுகாமவெ ருக்கலிக்குவில் தந்துமெய்
தோழிபாரத வலவர்மாயவர் துளவுநாறுநி றத்திலே
யொன்றுகின்றமின் பின்னைகூடுவர் பின்னையென்னையு கப்பரோ
வோதுவாயின வருவரேயென வுளமகாதம றிந்திலா
யன்றுசென்றவ ரென்றுசாகச னந்தனன்றனை வாங்கியே
யாவிவீழவ வன்றநீருட னழியவேகின ரல்லவோ, 94

**இருபத்தெண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.**

ஓதுதிண் பொறிக ளடக்கலாற் புலவ
ருயர்நிலை தோய்தலாற் கவுர
முலோகிதஞ் சார்ந்து பதம்பத மாக
வொடித்தலா லாயதம் பொருந்தி
யோங்கலாற் சதுர மாகலால் வன்னி
யொளியுற வுறுதலால் வேணு
வுடம்பிடி பயிற்றி யுயர்தலா லுணர்வு
மொடுக்கமில் லாததி னுலம்

மீதுவி புலஞ்சி கரமினன் றவழ்ந்து
மேகமுங் களரியிற் படிந்து
மின்னலாற் கதவ முடைமையான் முனிவர்
மீதுறு புங்கவர் செவ்வான்
மேலெனு நெடியன் றமனியன் முளரி
மீத்தொழி லாண்டகை நிகமம்
மிக்குறும் படிவம் மேலவர் புரந்த
மீளியோன் சங்கரன் றுர்க்கை

யாதியொத் திடுமம் மரண்வளைப் பதியி
லமர்ந்தவ சாரசச் சரண
மண்டர்ப ணிதலின் கற்பகங் கமழ
வரையுறு வரியுடை மிளிர
வடையலு மீன்ற வுந்தியம் வீச
வரிச்சிகன் விரிச்சிக னென்னு
மாழியுங் கோடு மிருசயம் பொலிய
வள்ளினில் வல்லிகை திகழச்

சூதெனு மீர்கோ வருளுறை பொழியத்
துலங்கிய வுவ்வியிற் றுளவு
சுரபிகந் திக்கத் திருவுரு முழுதுந்
தூய்மையின் மரகதத் திலங்கத்
தோன்றிமுன் வந்த கண்ணனே பார்த்தன்
சூதனே துலங்கிய படிவஞ்
சூழ்ந்திருந் தணங்கு மயக்கினு மறவேன்
ரேமறு வலித்துர விறையே. 95

### தாழிசை.

இறைவழங்கிட னங்கனுடியெ னிருதனந்தனி லெத்தனை
யின்றுதுன்றிட வேவுவீசின னின்பமின்பமெ னுவணமே

தறைபிளந்தவ ரங்கமேவிய தயையறிந்திலன் சேடுகஞ்
சங்கனன்றக மோதியேகினு மிங்குவந்தனை யென்செயும்

நறைமலிந்திடு கொக்கு சேரினு நயமிகுந்திடு மல்லதோர்
நாளுமென்றனை நோவுமோயினி நட்புகற்பும சோகமும்

மிறைபொழுந்திட லொன்றுமோவுயிர் மிகைகவர்ந்திடு நீலமும்
மிக்குவக்குமென் வேதமேவியல் லிக்குளம்படு மச்சமே. 96

### நேரிசை வெண்பா.

மச்சாவ ராகாகூர் மாநார சிங்காபூ
நச்சுவா மாபரசி ராமாவா—குச்சமிரா
மாபல பத்திரரா மாகண்ணு சார்ங்காவென்
ரூபமறு நின்ருள் சரண். 97

### எண்சீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

சரணநெ டித்தானு மிரணந டித்தானுந்
தரணமெ டுத்தானும் விரணம டுத்தானுங்

கரணமு றைத்தானுங் கிரணம றைத்தானுங்
கடவைமு றித்தானு மிடவைகு றித்தானும்

பரணமு கந்தானுந் திரணமி கந்தானும்
பரவைத டுத்தானு மிரவைய டுத்தானு

மரணம டித்தானு மிரணம டித்தானும்
வளவுவ னத்தானுந் துளவுவ னத்தானே. 98

### அறுசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

தானவ ருரமழிய வானவர் தொழுதெழவி ருமனென் சரமுடுகி நே
கானவர் களியுறவ நீதர்செய் கடுவினைத காதெனும் படியுருகி மே
லானவர் குதிகொளவெண் பாரத மருகியரி யாவியுஞ் சிதறவல ரூர்
போனவர் வரலறிதென் னுவழ குறுவிடமன் பூமலி துளவுவன மே. 99

## மடக்கு.

### பன்னிருசீர்க்கழிநெடிலடியாசிரிய விருத்தம்.

மேகம் படிந்த கோடரமே
மேவிடு மோவுன் கோடரமே
மேதை கவரு மாலோனே
மேவினன் படுமோ மாலோனே

மோகம் விளைக்கும் மாமகனே
மோதாச் சிதறு மாமகனே
முடுகி முனியுந் தோடகமே
முன்போ லோடுவ தோடகமே

மூக மடுக்கும் கோசேந்தே
முதைகொடுத் தார்வீண் கோசேந்தே
மூசல் தருமிந் தீவரமே
முழுங்கிய தவருகந் தீவரமே

தேக முருக்கும் மாதளவே
தெரிதனீர் வேண்டு மாதளவே
தெளிவோர் மீப்பொங் குளத்தாரே
சேர்ந்தார் திருவலிக் குளத்தாரே. 100

### நேரிசை வெண்பா.

ஏத்தரியான் வேதவல்லி யின்கோவல் லிக்குளத்தான்
பாத்தரியான் சீர்த்தியினைப் பாடுவரேன்—மீத்திண்ணஞ்
சாருவீர் வீடங்கு தங்கிய நித்தியரை
நேருவீர் நாவலரே நீர். 101

முற்றிற்று.

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தானத்தில்
1842–ஆம் வருடம் முதல் தர்மகர்த்தாவாக இருந்தவர்களின் பெயர்கள்.

| பெயர் ஸர்வஸ்ரீ | வருடம் முதல் | வரை |
|---|---|---|
| வானமாமலை சடகோபாசாரியர் | 1842 | 1872 |
| P. ராமானுஜலுநாயுடு | 1842 | 1883 |
| T. வேங்கடநாராயணபிள்ளை | 1842 | 1896 |
| வானமாமலை ராகவாசாரியார் | 1872 | 1904 |
| P. M. அப்பாசாமி பிள்ளை | 1897 | 1918 |
| P. ராஜரத்தினம் நாயுடு | 1897 | 1913 |
| C. ரங்கஸ்வாமி செட்டி | 1918 | 1926 |
| M. பார்த்தஸாரதி ஐயங்கார் | 1908 | 1911 |
| V. பார்த்தஸாரதி ஐயங்கார் | 1911 | 1931 |
| V. ரங்கநாதம்செட்டி | 1919 | 1946 |
| | 1946 | 1951 |
| | 1953 | 1956 |
| G. கோதண்டராமானுஜலுநாயுடு | 1925 | 1928 |
| L. வேங்கடகிருஷ்ணநாயுடு | 1928 | 1938 |
| V. M. லக்ஷ்மிநரஸிம்மாசாரியார் | 1938 | 1942 |
| C. ராஜரத்தினம் பிள்ளை | 1938 | 1939 |
| C. நரஸிம்மாசாரியார் | 1938 | 1943 |
| C. R. ஜகந்நாதம் பிள்ளை | 1939 | 1944 |
| | 1944 | 1949 |
| | 1949 | 1952 |
| V. வீரராகவாசாரியர் | 1948 | 1953 |
| C. சுப்பிரமணிய செட்டி | 1951 | 1952 |
| T. A. வரதாசாரியர் | 1953 | 1958 |
| M. V. நரஸிம்மலுநாயுடு | 1954 | 1959 |
| S. வேங்கட்ரங்கம் செட்டி | 1959 | 1961 |
| R. ராகவ ஐயங்கார் | 1953 | 1959 |
| V. ராஜகோபால் முதலியார் | 1959 | 1961 |
| C. S. பார்த்தஸாரதி ஐயங்கார் | 1959 | 1964 |
| B. D. V. ராமசாமி நாயுடு | 1961 | 1966 |
| E. பூபதி நாயுடு | 1966 | 1971 |
| T. V. திருவேங்கடாசாரியர் | 1964 | 1969 |
| V. ஜகந்நாதம் செட்டி | 1968 | 1973 |
| S. V. வரதராஜ ஐயங்கார் | 1969 | 1972 |
| P. G. செங்கல்வராய செட்டி | 1971 | 1976 |
| K. R. ஸ்ரீநிவாஸாசாரியர் | 1973 | 1976 |
| நாதெள்ள ஆதிகேசவலுகுப்தா | 1973 | 1976 |

திருவல்லிக்கேணி ஸ்ரீபார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான அத்யாபக கோஷ்டியின்

(i) அக்ராஸனர்களாக விளங்கிய ஸ்வாமிகள்

(1923 முதல்)

| திருநாமங்கள் | வருடம் முதல் | வருடம் வரை |
|---|---|---|
| ஸ்ரீ. உ. வே. அண்ணு ரங்காசாரியர் | 1925 | 1928 |
| ,, இ. அனந்தாசாரியர் | 1928 | 1930 |
| ,, பகுகுடும்பி வரதாசாரியர் | 5—3—30 | 24—1—33 |
| ,, P. M. கோபாலாசாரியர் | 24—1—33 | 14—10—41 |
| ,, V. M. கோபாலகிருஷ்ணமாசாரியர் | 14—10—41 | 4—2—46 |
| ,, ப. ரங்கப்பங்கார் | 10—2—46 | 4—8—46 |
| ,, P. M. கோபாலாசாரியர் | 4—8—46 | 8—52 |
| ,, T. A. வரதாசாரியர் | 8—52 | 15—9—53 |
| ,, V. A. கோபால ஐயங்கார் | 16— 9—53 | 31—7—55 |
| ,, A. ஸ்ரீரங்காசாரியர் | 31— 7—55 | 10—4—62 |
| ,, ப. ரங்கப்பங்கார் | 15— 4—62 | 31—10—64 |
| ,, C. ஸ்ரீனிவாஸ வரதாசாரியர் | 31— 5—65 | 31—10—74 |
| ,, அ. க. ஸ்ரீனிவாஸாசாரியர் | 31—10—74 | (இன்றுவரை) |

(ii) கார்யதரிசிகளாக விளங்கிய ஸ்வாமிகள்

| | | |
|---|---|---|
| ஸ்ரீ. உ. வே. பகுகுடும்பி வரதாசாரியர் | 1923 | |
| ,, T. A. ரங்காசாரியர் | 1924 | 1930 |
| ,, P. M. கோபாலாசாரியர் | 1930 | 1938 |
| ,, V. S. ரங்கஸ்வாமி | 1938 | 1939 |
| ,, P. M. கோபாலாசாரியர் | 1939 | May 1939 |
| ,, T. A. ரங்காசாரியர் | May 1939 | 11—2—1945 |
| ,, P. M. கோபாலாசாரியர் | 11—2—1945 | 10—2—1946 |
| ,, V. A. கோபால ஐயங்கார் | 10—2—1946 | 24—8—1946 |
| ,, T. A. வரதாசாரியர் | 25—8—46 | 4—9—48 |
| ,, P. K. ஸ்ரீராம ஐயங்கார் | 5—9—48 | 30—7—55 |
| ,, K. V. அனந்தாசாரியர் | 31—7—55 | 30—8—75 |
| ,, K. S. ராமானுஜாசாரியர் | 31—8—75 | 15—7—77 |
| ,, K. V. அனந்தாசாரியர் | 16—7—77 | 31—7—77 |
| ,, K. S. ராமானுஜாசாரியர் | 1—8—77 | 9—11—77 |
| ,, C. பார்த்தஸாரதி ஐயங்கார் | 10—11—77 | (இன்றுவரை) |

**கோஷ்டியின் சட்டதிட்டங்களில் சிலவற்றைக் குறிப்பிடுகிறோம்.**

1. **பெயர்:** திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி.

2. **சேரத்தக்கவர்கள்:** மேற்படி தேவஸ்தான ஓட்டர்களுக்கு ஏற்பட்ட எல்லைக்குள் 6 மாதம் நியதவாஸமுள்ளவர்களும் திவ்யப் பிரபந்தம் நாலாயிரத்தில் 2000 பாசுரங்களும் உபயுக்த வேதங்களும் ஸ்தோத்திர பாடங்களும் தெரிந்து கைங்கர்யத்தில் நியதமாக அங்வயிக்கும் யுக்த வயதுள்ள தென்கலை ஸ்வாமிகள் (பிராம்மணர்கள்).

3, **பொது கோஷ்டி:** முன் சொன்ன மாதிரியுள்ளவர்களாகச் சேர்க்கப்பட்டவர்கள்.

4. **நிர்வாஹ கோஷ்டி அல்லது எல்டர்லி அத்யாபகர்கள்:** பொது கோஷ்டியார் தங்களுள் வயது முதிர்ந்தவர்களும் அனுபவம் உள்ளவர்களுமான தக்க 7 ஸ்வாமிகளை (ஆசிர்வாதத்திற்கு வேண்டியவைகள்) புருஷ ஸூக்தம் முதலியவைகளும், ஸ்வஸ்தி வாசகம், பஞ்சசாந்தி, உபநிஷத், வேதவிண்ணப்பம் தொடக்கம், சாத்து உள்படவும், அனத்யயனம் உள்பட தினப்படி கால ஸந்தியிலும், ஆழ்வாராதிகள் திருநக்ஷத்திரங்களில் ஸேவிக்கக்கூடிய ப்ரபந்தங்களும், வாழித் திருநாமங்களும், யதிராஜவிம்சதி, தாடீபஞ்சகம், பூர்வ-உத்தர தினசரிகள், வரவரமுனி சதகம், ஆளவந்தார் ஸ்தோத்திரம் போன்ற ஸ்தோத்திர பாடங்களும் தெரிந்து நிர்வஹிக்கக்கூடியவர்களைத் தேர்ந்தெடுத்து அவர்களுள் ஒருவரை அக்ராஸனாதிபதியாகவும், ஒருவரைக் கார்யதரிசியாகவும் ஏற்படுத்தவேண்டும்.

5. **தொடக்கம்:** எல்டர்லி அத்யாபகர்கள் ஏற்படுத்தப்பட்ட முறைப்படி ஞாயிற்றுக்கிழமை முதல் தினம் ஒருவராக தொடக்கத்தில் நிர்வஹிக்க வேண்டும். தங்களால் வர அஸந்தர்ப்பமானல் மற்ற ஆறு பேர்களில் ஒருவரிடம் நமோதாக ஏற்பாடு செய்யவேண்டும்.

6. **கூட்டங்கள்:** நிர்வாஹ கோஷ்டிக்கு ஒருநாள் முன்பும், பொது கோஷ்டிக்கு 3 நாள் முன்பும் அங்கத்தினருக்குத் தெரிவிக்கவேண்டும். கோரம் நிர்வாக கோஷ்டிக்கு 4 பேரும் பொதுகோஷ்டிக்குக் கோஷ்டியில் ஸ்வாமிகளின் எண்ணிக்கையில் பாதியோ அல்லது 10 பேரோ, இதில் எது குறைவோ அது.

7. **சேர்த்தல்:** நிர்வாஹ கோஷ்டியார் தக்கவர்களைக் கோஷ்டியின் படிவத்தில் (பாரம்) மேற்படியாரின் ஒப்புதலைக் கையொப்பத்துடன் பெற்றபின் புதிதாகச் சேர்த்துக்கொள்ளலாம்.

8. **நீக்குதல்:** காலமாய்விட்டவர்களையும், ஆறுமாத நியதவாஸமில்லாதவர்களையும், நிபந்தனைக்கு உட்படாதவர்களையும் நிர்வாஹ கோஷ்டியார் நீக்கலாம்.

9. **நிபந்தனைகள்:** பொது கோஷ்டியார் நிபந்தனைகளைப் புதுப்பிக்கவும், நீக்கவும் மாற்றவும் கூடும்.

சென்னை உயர்நீதிமன்றத்தில் கோஷ்டியால் தொடரப்பட்ட C. S. 349 of 1923 என்கிற தாவாவின் தீர்மானப்படி "திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்த ஸாரதி ஸ்வாமி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி' என்ற பெயர் சூட்டப் பட்டுத் தனித்து இயங்கி, கோஷ்டியின் எல்டர்லி மெம்பர்களால் (முதியோர் களால்) அவ்வப்போது சேர்க்கப்பட்டு வேத அத்யாபக கைங்கர்யம் செய்த/ செய்கிற ஸ்வாமிகளின் பெயர்கள்.

### 6—5—1925 இல் சேர்க்கப்பட்டவர்கள்

1. ஸ்ரீ. உ. வே. அண்ணுரங்காசாரியர் (வேதபாராயணம்)
2. ,, கு. இ. அனந்தாசாரியர்
3. ,, கு. இ. வேங்கடாசாரியர்
4. ,, கூரம் கோவிந்தாசாரியர்
5. ,, காயரம்பேடு ரங்காசாரியர்
6. ,, கோ. வீராசாமி ஐயங்கார்
7. ,, சேரன்குளம் வரதாசாரியர்
8. .. பழனூர் ரங்கப்பங்கார்
9. ,, தி. ந. ச. வரதாசாரியர்
10. ,, வாத்தியார் ரங்கஸ்வாமி ஐயங்கார் (வேதபாராயணம்)
11. ,, அ. வி. நரஸிம்மாசாரியர்
12. ,, வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்
13. ,, பெ. மு. கோபாலாசாரியர்
14. ,, தி. அ. ரங்காசாரியர்
15. ,, P. S. பார்த்தஸாரதி ஐயங்கார்
16. ,, எச்சூர். கோபாலாசாரியர்
17. ,, V. K. ராமானுஜாசாரியர்
18. ,, அம்பி பாஷ்யகார்
19. ,, கு. இ. ஸ்ரீரங்காசாரியர்
20. ,, வை. மு. லக்ஷ்மிநரஸிம்மாசாரியர்
21. ,, தி. நி. ச. அனந்தாசாரியர்
22. ,, A. K. அனந்தாசாரியர்
23. ,, திருமழிசை அப்பன் ராமானுஜ ஐயங்கார்
24. ,, திருமழிசை வங்கீபுரம் திருமலாசாரியர்
25. ,, திருத்தேரி ரங்காசாரியர்
26. ,, M. C. மணவாள ஐயங்கார் (வேதபாராயணம்)
27. ,, ஸ்ரீரங்கம் ரங்கஸ்வாமி ஐயங்கார்
28. ,, கீழானூர் ரங்கஸ்வாமி ஐயங்கார்
29. ,, பத்தங்கி பார்த்தஸாரதி ஐயங்கார்
30. ,, முஸர்பாக்கம் ராகவாசாரியர்

### 19—12—1925 இல் சேர்க்கப்பட்டவர்கள்

31. ,, அரசாணிபாலை பார்த்தஸாரதி ஐயங்கார்
32. ,, சீர்காழி கோபால ஐயங்கார் (வேதபாராயணம்)
33. ,, மாம்பாக்கம் வேங்கடாசாரியர்

## 17—2—30 இல் சேர்க்கப்பட்டவர்கள்

34. ஸ்ரீ. உ. வே. குவளை அனந்தாசாரியர்
35. ,, தி. அ. வே. ஸ்ரீனிவாஸாசாரியர்
36. ,, கோ. ராகவாசாரியர் (வேதபாராயணம்)
37. ,, தோ. தெய்வநாயக ஐயங்கார்
38. ,, P. T. ஸ்ரீனிவாஸாசாரியர்
39. ,, வெ. ப. குப்புஸ்வாமி ஐயங்கார்

## 19—2—33 இல் சேர்க்கப்பட்டவர்கள்

40. ,, பெ. பார்த்தஸாரதி ஐயங்கார்
41. ,, தாமல் விஜயராகவாசாரியர் (வேதபாராயணம்)
42. ,, கனபாடி ஸ்ரீனிவாஸாசாரியர் (வேதபாராயணம்)
43. ,, P. A. பார்த்தஸாரதி ஐயங்கார்
44. ,, P. K. ஸ்ரீராம ஐயங்கார்
45 ,, T. A. வரதாசாரியர்
46. ,, தேசூர் ஸ்ரீனிவாஸவரதாசாரியர்

## 19—6—1934 இல் சேர்க்கப்பட்டவர்

47. ,, அ. க. ஸ்ரீனிவாஸாசாரியர் (வேதபாராயணம்)

## 10—2—1935 இல் சேர்க்கப்பட்டவர்

48, ,, அ. ஸ்ரீரங்காசாரியர்

## 11—12—35 இல் சேர்க்கப்பட்டவர்கள்

49. ,, ஸாது ராமானுஜாசாரியர்
50. ,, V. திருமலை ஐயங்கார்

## 6—3—37 இல் சேர்க்கப்பட்டவர்கள்

51. ,, V. S. ரங்கஸ்வாமி ஐயங்கார்
52. ,, அத்திப்பட்டு அழசிங்கராசாரியர்
53. ,, K. E. கோபாலஸ்வாமி ஐயங்கார்
54. ,, பெ. ர. ஸ்ரீனிவாஸ ஐயங்கார்

## 20—10—38 இல் சேர்க்கப்பட்டவர்கள்

55. ,, V. A, கோபால ஐயங்கார்
56. ,, மாமண்டூர் ஆழ்வார் ஐயங்கார்

## 11—2—45 இல் சேர்க்கப்பட்டவர்கள்

57. ,, அ. கிருஷ்ணமாசாரியர்
58. ,, குவளை ராமானுஜாசாரியர்
59. ,, பெ. வி. பாஷ்யகார்
60. ,, K. நரஸிம்மாசாரியர்
61. ,, M. M. பார்த்தஸாரதி ஐயங்கார்
62. ,, கீழானூர் சடகோபாசாரியர் (வேதபாராயணம்)
63. ,, காவல்கழனி அனந்தாசாரியர்
64. ,, K. R. வேங்கடகிருஷ்ணன் (வேதபாராயணம்)

13—2—1955 இல் சேர்க்கப்பட்டவர்

65. ,, நல்லப்பா நரஸிம்மாசாரியர்

5—7—1955 இல் சேர்க்கப்பட்டவர்கள்

66. ,, பிள்ளைலோகம் திருவேங்கடாசாரியர்
67. ,, குவளை திருமலாசாரியர்
68. ,, ந. ச. பார்த்தசாரதி ஐயங்கார்

13—9—59 இல் சேர்க்கப்பட்டவர்

69. ,, V. R. வரதநாராயண ஐயங்கார்

12—2—62 இல் சேர்க்கப்பட்டவர்கள்

70. ,, A. ராமானுஜாசாரியர்
71. ,, மன்னார்குடி வேங்கடாசாரியர்

15—10—64இல் சேர்க்கப்பட்டவர்கள்

72. ,, T. V. B. நரஸிம்மாசாரியர்
73. ,, கூரம் பாஷ்யகாசாரியர்

ரிட்பெடிஷன் விசாரணையின்போது 2—3—1969 தேதியில் சேர்க்கப்பட்டு, ரிட் தள்ளுபடியானதும் 20—4—74 தேதியில் நீக்கப்பட்ட ஸ்வாமிகள்.

1. ஸ்ரீ. உ. வே. பிள்ளைலோகம் பாஷ்யகாரர்
2. ,, T. A. ஸ்ரீனிவாஸராகவன்
3. ,, T. S. ராஜகோபால ஐயங்கார்
4. ,, P. சுந்தரராஜன்
5. ,, T. P. அழகர்
6. ,, S. ராமானுஜாசாரியர்
7. ,, பெலாப்புத்தூர் கிருஷ்ணமாசாரியர்
8. ,, குன்னபாக்கம் கோபாலாசாரியர்
9. ,, A. P. ஸ்ரீனிவாஸாசாரியர்
10. ,, விளாகம் பார்த்தஸாரதி ஐயங்கார்
11. ,, V. K. கிருஷ்ணமாசாரியர்
12. ,, சம்பத் ஐயங்கார்
13, ,, O. ரங்கஸ்வாமி ஐயங்கார்
14. ,, மாம்பாக்கம் பார்த்தஸாரதி ஐயங்கார்
15. ,, K. ரங்கஸ்வாமி ஐயங்கார்
16. ,, P. K. ராம ஐயங்கார்
17. ,, திருமழிசை வேங்கடாசாரியர்
18. ,, M. சடகோபாசாரியர்
19. ,, A. K. திருவேங்கடாசாரியர்

20—4—74 இல் சேர்க்கப்பட்டவர்கள்

74. ,, O. ரங்கஸ்வாமி ஐயங்கார் (வேதபாராயணம்)
75. ,, S. ராமானுஜாசாரியர்
76. ,, T. A. ஸ்ரீனிவாஸராகவன்
77. ,, P. தெய்வநாயகன்

26—10—75 இல் சேர்க்கப்பட்டவர்கள்

78. ,, T. S. ராஜகோபால ஐயங்கார்
79. ,, திருமழிசை வேங்கடாசாரியர்

கோஷ்டியின் தீர்மான புத்தகத்திலிருந்து சிலவற்றின் நகல்களை இங்குக் குறிப்பிடுகிறோம்

| தேதி | தீர்மானம் | தீர்மான புத்தகத்தின் பக்கம் |
|---|---|---|
| 24—1—33 | தொடங்கினவர் அனுமதியின் பேரில் தொடக்கக்காரர் தாமதித்து ஏள்ளினாலும்-முன் அமரலாம். | |
| 4—3—37 | தர்மகர்த்தா V. M. ரங்கநாதம் செட்டியார் அத்யாபகர்களைச் சரியாகக் கௌரவிக்கவில்லை. அதற்குச் சில அத்யாபகர்களே ஸகாயம் செய்தார்கள். இது கூடாது. கோஷ்டியின் மூலம்தான் எந்த வியவகாரமும் நடத்த வேண்டும். | 49 |
| 29—1—39 | ஏழு லீடர்கள் நியமிக்கப்பட்டார்கள் (வாரத்தில் 7 நாட்களுக்குத் தினம் ஒருவராகக் கைங்கர்யம் செய்ய). | 62 |
| 28—5—39 | தர்மகர்த்தர்களின் லெட்டர் நடவாமல் இருந்ததை நடந்ததாக எழுதியிருக்கிறபடியால் அது தவறு என்று கண்டிக்கப்பட்டது. தர்மகர்த்தர்கள் லெட்டருக்கு ஒரு பதிலும் தரவேண்டியதில்லை என்று தீர்மானிக்கப் பட்டது. | 67 |
| 10—7—39 | அன்றைய தொடக்கதார் வராதகாலத்தில் பார்த்த ஸாரதி ஸந்நிதியில் தொடக்கம் பார்ப்பவரே அழகிய சிங்கர் ஸந்நிதியில் தொடக்கம் பார்க்கவேண்டியது. | 73 |
| ,, | லீடர்களே வரவில்லை எனில் மற்றவர் யார் தொடக்கம் பார்த்தாலும் முதலில் எந்த எல்டர்லி மெம்பர் வந்தாலும் அவரிடம் ஒப்புவிக்க வேண்டியது. தொடக்க தாரர்களில் அன்றைய தொடக்கதாரர் வரவில்லை எனில் தொடக்கம்பார்த்து வெகுநாட்கள் ஆனவர் தொடக்கம் பார்க்க வேண்டியது. | 74 |
| ,, | கைங்கர்யத்தில் அன்வயிக்கும்போது அதற்கு விரோதமாக வேத அத்யாபக ஸ்வாமிகள் யாரும் கூச்சலிடக் கூடாது. ஒருவரோடு ஒருவர் பேசவும் கூடாது. தொடக்கதாரர்களே கவனித்து ஒழுங்காக நடத்த வேண்டியது. அப்படி தொடக்கதாரர் தப்பு செய்தால் இதர எல்டர்லி அத்யாபகர்களிடம் தெரிவிக்க வேண்டியது. | 75<br>76 |

| | | |
|---|---|---|
| 10—8—41 | அடுத்து மூன்று மீட்டிங்குக்கும் ஆஜர் ஆகாத எல்டர்லி மெம்பர்கள் தங்கள் ஸ்தானத்தை இழக்கக் கடவர்கள். | 98 |
| ,, | அஜெண்டாவில் உள்ள விஷயம் அக்ராஸனரின் ஸம்பந்தமானதாய் இருந்தால், அக்ராஸனர் அதைச் சர்ச்சை செய்யும்போது விலகவேண்டும் என்று தீர்மானிக்கப்பட்டது. | 100 |
| 31—8—41 | சட்டதிட்டத்திற்கு விரோதமாக யாரும் நடக்கக் கூடாது. | 100 |
| 14—12—41 | கோஷ்டியின் சட்டதிட்டங்கள் இருமுறை வாசிக்கப்பட்டுப் பொது கோஷ்டியால் அங்கீகரிக்கப்பட்டது. | 108 |
| 11—2—45 | சட்டதிட்டம் நிறைவேறிய பின் முதல் ஏழு பேர் எல்டர்லி மெம்பர்களாக ஏற்படுத்தி அங்கீகாரம் செய்யப்பட்டது. | |
| | ஏழு தொடக்கதாரர்கள்:<br>1. வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர்<br>2. பெ. மு. கோபாலசாரியர்<br>3. மடம் கோபால ஐயங்கார்<br>4. பழனூர் ரங்கப்பங்கார்<br>5. அஷ்டகோத்ரம் கோ. ராகவாசாரியர்<br>6. அ. வி. நரஸிம்மாசாரியர்<br>7. அ. க. ஸ்ரீனிவாஸாசாரியர் | 110 |
| ,, | தீர்மான புத்தகத்தில் சொந்த அபிப்ராயத்தை எழுதக் கூடாது. தனி பேப்பரில் எழுதித் தரவேண்டும். | 113 |
| 3—2—46 | இனி பிரேத சப்தம் சொல்லி உபாத்தியாயம் செய்யும் அத்யாபகர்கள் பிரதமதினம் முதல் ஸபிண்டிகரணம் வரை தொடக்கம் பார்க்கவும், ஸ்ரீ சடகோபம் ஸாதித்துக்கொள்ளவும் கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது. | 124 |
| 1—8—46 | இனிமேல் தொடக்கதாரர்கள் அனுமதியில்லாமல் ஸ்வதந்திர பிரஸாதங்கள் இயல்படி முதலானவைகளை வாங்கக்கூடாது என்று தீர்மானிக்கப்பட்டது | 131 |
| ,, | பகுமானம் ஸம்பந்தமான பணங்களை 6-வது நிபந்தனைப்படி உடனே கார்யதரிசியிடம் சேர்ப்பிக்கவேண்டியது. | |

5—9—48 சட்டம் நாலாவது நிபந்தனைப்படி அடுத்தடுத்து
மூன்று மீட்டிங்கிற்கு வராத கீழ்க்கண்ட ஸ்வாமிகள்
(1) அ. வீ. நரஸிம்மாசாரியர், (2) V. A. கோபால
ஐயங்கார், (3) ப. ரங்கப்பங்கார், (4) வை.மு. கோபால 148
கிருஷ்ணமாசாரியர் தங்கள் தொடக்கஸ்தானத்தை
இழந்துவிட்டதாக (அதாவது எல்டர்லி மெம்பர்
ஸ்தானத்தை) தீர்மானிக்கப்பட்டது.

12—3—53 5-4-53இல் பெருமாள் வஜ்ஜிராங்கி கைங்கர்யத்திற்கு
எழுந்தருளப்போவதாகத் தெரிந்ததை இப்படி எழுந்
தருளுவது ஸந்நிதி மாமூலுக்கும் வழக்கத்திற்கும்
விரோதம், பகவத் அபசாரம் என்று ஏகமனதாய் 164
ஆக்ஷேபிக்கத் தீர்மானிக்கப்பட்டது. தர்மகர்த்தர்
களுக்கும், போர்டுக்கும் தெரிவிக்கத் தீர்மானிக்கப்
பட்டது.

தர்மகர்த்தர்களின் 2-2-55தேதிய லெட்டர் அமீனுவின்
ரிபோர்ட்டை அடிப்படையாகக்கொண்டது. மேற்படி
அமீனுவின் இரண்டு ரிபோர்ட்களின் நகல்களைக் கேட்
கத் தீர்மானிக்கப்பட்டது. மேலும் வேத அத்யாபக
கோஷ்டியாரை எக்ஸ்ப்ளனேஷன் கேட்கிறபடியால், 170
கோர்ட் டிகிரியில் தர்மகர்த்தர்களுக்கு எந்தத் தீர் 171
மானம், எந்தச் சட்டம், எந்தப் பாரா மூலம் இது
கேட்கப்படுகிறது என்று தெரிவிக்கும்படி தர்மகர்த்தர்
களைக் கேட்கத் தீர்மானிக்கப்பட்டது.

31—7—55 மாதம் ஒருமுறை அக்ராஸனஸ்வாமி கோஷ்டியின்
கணக்குகளையும் கையிருப்பு துகையையும் ஸரிபார்க் 183
கும்படி தீர்மானிக்கப்பட்டது.

27—10—56 மணவாளமாமுனிகள் ஸபையில் வெகுகாலமாக
அத்யாபககோஷ்டியில் ஓர் இருவர் மெம்பராக இருந்து
வந்திருக்கிறார்கள். தற்காலம் அத்யாபகர்கள் அந்த
ஸபையில் யாரும் இல்லை. இப்போது ஒரு ஸ்தானம்
காலியாக இருக்கிறது. அந்த ஸ்தானத்தில் நமது 195
அத்யாபகஸ்வாமிகளில் ஒருவரை மெம்பராகச் சேர்த்
துக்கொள்ளும்படி கோஷ்டியார் விரும்புகிறார்கள்.
இந்த நகலை மணவாளமாமுனிகள் ஸபைக்கு நமது
கார்யதரிசி தெரிவிக்கவேண்டியது என்றும் தீர்மானிக்
கப்பட்டது.

27—3—62 டிரஸ்டிகள் ஸ்ரீபார்த்தஸாரதி பிரம்ம உத்ஸவம் முதல் வேதபாராயண ஸ்வாமிகளை வரவழைக்க ஏற்பாடு செய்ய எழுதியுள்ளார்கள். மேற்படி லெட்டரைப் படித்து அதற்கு வேண்டிய காரியங்களைக் கார்யதரிசி செய்துகொள்ளும்படி தீர்மானிக்கப்பட்டது. தர்ம கர்த்தர்களுடன் கலந்து பட்ஜெட் அனுமதியைத் தெரிந்துகொண்டு உசிதமான ஸ்வாமிகளை வரவழைக்கும்படி தீர்மானிக்கப்பட்டது. 210

19—4—64 ஸ்ரீ M. M. பார்த்தஸாரதி ஐயங்கார் தர்மகர்த்தர்களுக்கு எழுதின லெட்டரின் நகல் படிக்கப்பட்டது. இரண்டு உத்ஸவங்கள் ஒன்றுசேரும்போது ப்ரதான உத்ஸவத்திற்கான ஸேவைதான் நடப்பது வழக்கம். இரண்டு உத்ஸவங்களும் தனித்தனியாக வந்து புறப்பாடு நடக்குமானுல்தான் தனித்தனியாக ஸேவை உண்டு என்பதைத் தர்மகர்த்தர்களுக்குத் தெரிவிக்கத் தீர்மானிக்கப்பட்டது. 217

தர்மகர்த்தர்களின் 30-1-64 தேதிய லெட்டர் படிக்கப்பட்டது. இருவர் இருந்து நிர்வஹிப்பதும் உண்டு என்றும் அத்யாபக கைங்கர்யம் செவ்வனே நடந்திருக்கிறது என்றும் தர்மகர்த்தர்களுக்குத் தெரிவிக்கத் தீர்மானிக்கப்பட்டது. 218

19—4—64 தர்மகர்த்தர்கள் ப்ராசீன வழக்கங்களை மாற்றி நவீனப்படுத்துவதைக் கண்டித்து மேற்படி தீர்மானத்தின் நகலைத் தர்மகர்த்தர்களுக்கும் போர்டுக்கும் அனுப்பத் தீர்மானிக்கப்பட்டது. 231

நூதனமாக, திருக்கல்யாண உத்ஸவம் நடத்த தர்மகர்த்தர்களின் யத்தனத்தைக் கண்டித்துத் தீர்மானம் நிறைவேற்றி அதன் நகலைத் தர்மகர்த்தர்களுக்கு அனுப்பத் தீர்மானிக்கப்பட்டது. 236

17—12—68 கோஷ்டிக்கு அவமரியாதையும், உரிமைகளைப் பறிக்கும்படியான கார்யங்களும் செய்யப்பட்டன என்று தீர்மானித்து, மேற்படி அதிகாரிகளின் போக்கைக் கண்டித்துத் தீர்மானம் போட்டு அதன் நகல் அதிகாரிகளுக்கு அனுப்பப்பட்டது. 247

# ஸ்ரீ வைஷ்ணவ திவ்யதேசங்கள் 108

(ஸ்ரீ. உ. வே. C. ராமாநுஜன்)

### வெண்பா

ஈரிருபதாஞ் சோழம் ஈரொன்பதாம் பாண்டி
ஓர்பதின்மூன் றும்மலைநாடு ஓரிரண்டாம்—சீர்நடுநாடு
ஆறேடீ ரெட்டுத் தொண்டை அவ்வடநாடு ஆறிரண்டு
கூறுதிருநாடு ஒன்றுக் கொள்.

மயர்வறமதிநலம் அருளப்பெற்ற ஆழ்வார்கள் மங்களாசாஸநம் செய்தருளிய திவ்யதேசங்கள் 108.

| | |
|---|---|
| சோழநாடு | 40 |
| பாண்டிநாடு | 18 |
| மலைநாடு | 13 |
| நடுநாடு | 2 |
| தொண்டைநாடு | 22 |
| வடநாடு | 12 |
| திருநாடு | 1 |
| | 108 |

ஆங்காங்குக் கோயில்கொண்டு எழுந்தருளியிருக்கும் பெருமாள், தாயார் திருநாமங்களைச் சுலபமாகத் தெரிந்துகொள்வதற்காகத் தொகுத்துக் குறிப்பிடுகிறேன். இவைகளைப் ப்ரதிதினம் ஒருமுறை வாசித்தால் (மனதால் த்யானித்தால்) அத்தனை திவ்யதேச எம்பெருமான்களின் நிர்ஹேதுக கடாக்ஷம் ஸித்திக்கும் என்பது திண்ணம்.

### சோழநாட்டுத் திருப்பதிகள்

| | திவ்யதேசம் | பெருமாள் திருநாமம் | தாயார் திருநாமம் |
|---|---|---|---|
| 1. | திருவரங்கம் | ஸ்ரீரங்கநாதன், நம்பெருமாள் | ஸ்ரீரங்க நாச்சியார் |
| 2. | உறையூர் | அழகியமணவாளன் (திருப்பாணாழ்வார் அவதாரம்) | உறையூர்வல்லி |
| 3. | தஞ்சை மாமணிக்கோயில் | நீலமேகப்பெருமாள் | செங்கமலவல்லி |
| 4. | திருவன்பில் | திருவடிவழகியநம்பி | அழகியவல்லி |

| | | | |
|---|---|---|---|
| 5. | திருக்கரம்பனூர் | புருஷோத்தமன் | பூர்வாதேவி |
| 6. | திருவெள்ளறை | புண்டரீகாக்ஷன் | பங்கயச்செல்வி |
| 7. | புள்ளம்பூதங்குடி | வல்லிராமன் | பொற்றாமரையாள் |
| 8. | திருப்பேர்நகர் | அப்பக்குடத்தான் | கமலவல்லி |
| 9. | திருஆதனூர் | ஆண்டளக்குமையன் | ஸ்ரீரங்கநாயகியார் |
| 10. | திருவழுந்தூர் | ஆமருவியப்பன் | செங்கமலவல்லி |
| 11. | திருச்சிறுபுலியூர் | அருள்மாகடல் | திருமாமகள் |
| 12. | திருச்சேறை | ஸாரநாதன் | ஸாரநாயகி |
| 13. | தலைச்சங்கநாண்மதியம் | நாண்மதியப்பெருமாள் | செங்கமலவல்லி |
| 14. | திருக்குடந்தை | சார்ங்கபாணிப்பெருமாள் (ஆராவமுதன்) | கோமளவல்லி |
| 15. | திருக்கண்டியூர் | அரன் சாபந்தீர்த்த பெருமாள் | கமலவல்லி |
| 16. | திருவிண்ணகர் | உப்பிலியப்பன் | பூமிதேவி நாச்சியார் |
| 17. | திருக்கண்ணபுரம் | சௌரிராஜன் | கண்ணபுரநாயகி |
| 18. | திருவாலிதிருநகரி | வயலாலிமணவாளன் | அம்ருதகடவல்லி |
| 19. | திருநாகை | சௌந்தர்யராஜன் | சௌந்தர்யவல்லி |
| 20. | திருநறையூர் (நாச்சியார் கோயில்) | நம்பி | நம்பிக்கை நாச்சியார் |
| 21. | நந்திபுரவிண்ணகரம் (நாதன் கோவில்) | விண்ணகரப்பெருமாள் (ஜகந்நாதன்) | செண்பகவல்லி |
| 22. | திரு இந்தளூர் | சுகந்தவனநாதன் | சந்திரசாப விமோசன வல்லி (புண்டரீகவல்லி) |
| 23. | திருச்சித்திரகூடம் | கோவிந்தராஜன் | புண்டரீகவல்லி |
| 24. | காழிச்சீராமவிண்ணகரம் | தாடாளன் | மட்டவிழுங்குழலி |
| 25. | கூடலூர் | வையங்காத்தபெருமாள் | பத்மாஸனவல்லி |
| 26. | திருக்கண்ணங்குடி | ச்யாமளமேனிப் பெருமாள் | அரவிந்தவல்லி |
| 27. | திருக்கண்ணமங்கை | பக்தவத்ஸலப்பெருமாள் | அபிஷேகவல்லி |
| 28. | கவித்தலம் | கஜேந்திரவரதர் | ரமாமணிவல்லி, பொற்றாமரையாள் |
| 29. | திருவெள்ளியங்குடி | கோலவில்லிராமன் | மரகதவல்லி நாச்சியார் |
| 30. | திருமணிமாடக்கோயில் | நரநாராயணன், நந்தா விளக்கு | புண்டரீகவல்லி |
| 31. | திருவைகுந்தவிண்ணகரம் | வைகுந்தநாதன் | வைகுந்தவல்லி |
| 32. | திருஅரிமேயவிண்ணகரம் | குடமாடுகூத்தர் | அமிர்தகடவல்லி |
| 33. | திருத்தேவனார் தொகை | தெய்வநாயகன் | கடல்மகள் நாச்சியார் |
| 34. | திருவண்புருடோத்தமம் | புருஷோத்தமன் | புருஷோத்தமநாயகி |

| | | | |
|---|---|---|---|
| 35. | திருச்செம்பொன்செய் கோயில் | பேரருளாளர் | அல்லிமாமலர்நாச்சியார் |
| 36. | திருத்தெற்றியம்பலம் | செங்கண்மால் | செங்கமலவல்லி |
| 37. | திருமணிக்கூடம் | மணிக்கூடநாயகன் | திருமாமகள் |
| 38. | திருக்காவளம்பாடி | கோபாலகிருஷ்ணன் | மடவரல்மங்கை |
| 39. | திருவெள்ளக்குளம் | கண்ணன் | பூவார்திருமகள் |
| 40. | திருப்பார்த்தன்பள்ளி | தாமரையாள்கேள்வன் | தாமரைநாயகி |

## பாண்டியநாட்டுத் திருப்பதிகள்-18

| | | | |
|---|---|---|---|
| 1. | திருமாலிருஞ்சோலை | சுந்தரபாஹு, அழகர், மாலலங்காரர் | சுந்தரவல்லி நாச்சியார் |
| 2. | திருக்கோஷ்டியூர் | ஸௌம்யநாராயணன் | திருமாமகள் |
| 3. | திருமெய்யம் | ஸத்யகிரிநாதன் | உய்யவந்தாள் |
| 4. | திருப்புல்லாணி (தர்ப்பசயநம்) | கல்யாணஜகந்நாதன் | கல்யாணவல்லி |
| 5. | திருத்தண்கால் | அப்பன் (தண்காலப்பன்) | அன்னநாயகி |
| 6. | திரு மோகூர் | காளமேகப்பெருமாள் | திருமோகூர்வல்லி |
| 7. | திருக்கூடல் (தென்மதுரை) | கூடலழகர் | மரகதவல்லி |
| 8. | ஸ்ரீவில்லிபுத்தூர் | வடபத்ரசயநர் (ரங்கமன்னர்) | ஆண்டாள், கோதை |
| 9. | திருக்குருகூர் | ஆதிநாதன், பொலிந்து நின்றபிரான் (ஸ்ரீ நம்மாழ்வார் அவதாரம்) | ஆதிநாதவல்லி |
| 10. | துலைவில்லிமங்கலம் | தேவபிரான் (அரவிந்தலோசனன்) | கருந்தடங்கண்ணி |
| 11. | சிரீவரமங்கை (வானமாமலை) | தெய்வநாயகன், தோதாத்ரி | சிரீவரமங்கை |
| 12. | திருப்புளிங்குடி | காய்சினவேந்தன் | மலர்மகள் நாச்சியார் |
| 13. | திருப்பேரை | மகரநெடுங்குழைக்காதர் | குழைக்காதுவல்லி |
| 14. | ஸ்ரீவைகுந்தம் | கள்ளபிரான், வைகுந்த நாதன் | வைகுந்தவல்லி |
| 15. | வரகுணமங்கை | விஜயாஸனர் | வரகுணவல்லி |
| 16. | திருக்குளந்தை (பெருங்குளம்) | மாயக்கூத்தன் | குளந்தைவல்லி |
| 17. | திருக்குறுங்குடி | வைஷ்ணவ நம்பி<br>மலைமேல் நம்பி<br>நின்ற நம்பி<br>இருந்த நம்பி<br>கிடந்த நம்பி<br>திருப்பாற்கடல் நம்பி | குறுங்குடிவல்லி |
| 18. | திருக்கோளூர் | வைத்தமாநிதி (மதுரகவிகள் அவதாரம்) | கோளூர்வல்லி |

## மலைநாட்டுத் திருப்பதிகள்-13

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவனந்தபுரம் | அனந்தபத்மநாபன் | ஸ்ரீஹரிலக்ஷ்மி |
| 2. | திருவண்பரிசாரம் | திருக்குறளப்பன், திருவாழ்மார்பன் | கமலவல்லி |
| 3. | திருக்காட்கரை | அப்பன் | பெருஞ்செல்வநாயகி |
| 4. | திருமூழிக்களம் | திருமூழிக்களத்தான் | மதுரவேணி |
| 5. | திருப்புலியூர் (குட்டநாடு) | மாயப்பிரான் | பொற்கொடி |
| 6. | திருச்செங்குன்றூர் | இமையவரப்பன் | செங்கமலவல்லி |
| 7. | திருநாவாய் | நாராயணன் | மலர்மங்கை நாச்சியார் |
| 8. | திருவல்லவாழ் | கோலப்பிரான் | செல்வத்திருக்கொழுந்து |
| 9. | திருவண்வண்டூர் | பாம்பணையப்பன் | கமலவல்லி |
| 10. | திருவாட்டாறு | ஆதிகேசவன் | மரகதவல்லி |
| 11. | திருவித்துவக்கோடு | உய்யவந்தபெருமாள் | வித்துவக்கோட்டுவல்லி |
| 12. | திருக்கடித்தானம் | அற்புதநாராயணன் | கற்பகவல்லி |
| 13. | திருவாறன்விளை | திருக்குறளப்பன் | பத்மாஸன நாச்சியார் |

## நடுநாட்டு திருப்பதிகள்-2

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவயிந்திரபுரம் | தெய்வநாயகப்பெருமாள் | வைகுண்டநாயகி |
| 2. | திருக்கோவலூர் | திருவிக்ரமன், ஆயனார் | பூங்கோவல் நாச்சியார் |



## தொண்டைநாட்டுத் திருப்பதிகள்-22

| | | | |
|---|---|---|---|
| 1. | திருக்கச்சி அத்திகிரி | வரதராஜப்பெருமாள் | பெருந்தேவி |
| 2. | திருஅட்டபுயகரம் | ஆதிகேசவன் (அஷ்டபுஜநரஸிம்மன்) | புஷ்பவல்லி (அலர்மேல்மங்கை) |
| 3. | திருத்தண்கா | விளக்கொளி (தீபப்பிரகாசர்) (வேதாந்தாசாரியர் அவதாரம்) | மரகதவல்லித் தாயார் |
| 4. | வேளுக்கை | அழகியசிங்கர் | வேளுக்கைவல்லி |
| 5. | பாடகம் | பாண்டவதூதர் | ருக்மிணி, ஸத்யபாமை |
| 6. | திருநீரகம் | ஜகதீசப்பெருமாள் | நிலமங்கைவல்லி |
| 7. | நிலாத்திங்கள் துண்டம் | நிலாத்திங்கள் துண்டத்தான் | நேரொருவரில்லாவல்லி |
| 8. | திருஊரகம் (உலகளந்த பெகுமாள் கோவில்) | உலகளந்தபெருமாள் | அமுதவல்லி |
| 9. | திருவெஃகா | யதோக்தகாரி (பொய்கை ஆழ்வார் அவதார ஸ்தலம்) | கோமளவல்லி |

| | | | |
|---|---|---|---|
| 10. | திருக்காரகம் | கருணாகரப்பெருமாள் | பத்மாமணி |
| 11. | திருக்கார்வானம் | கள்வர் | கமலவல்லி |
| 12. | திருக்கள்வனூர் | ஆதிவராகப்பெருமாள் | அஞ்சிலை நாச்சியார் |
| 13. | திருப்பவளவண்ணம் | பவளவண்ணப்பெருமாள் | பவளவல்லி |
| 14. | பரமேச்சுரவிண்ணகரம் (வைகுண்டப்பெருமாள் சந்நிதி) | பரமபதநாதன் | வைகுந்தவல்லி |
| 15. | திருப்புட்குழி | விஜயராகவப்பெருமாள் | மரகதவல்லி |
| 16. | திருநின்றவூர் | பக்தவத்ஸலன், பத்தராவி | என்னைப்பெற்ற தாயார் |
| 17. | திருவெவ்வுள் | வீரராகவப்பெருமாள் | கனகவல்லி |
| 18. | திருநீர்மலை | நீலமுகில்வண்ணன் | அணிமாமலர்மங்கை |
| 19. | திருவிடவெந்தை | நித்யகல்யாணர் | கோமளவல்லி |
| 20. | திருக்கடல்மல்லை (மஹாபலிபுரம்) | தலசயனத்துறைவார் (பூதத்தாழ்வார் அவதாரம்) | நிலமங்கை நாச்சியார் |
| 21. | திருவல்லிக்கேணி (ப்ருந்தாரண்ய க்ஷேத்ரம்) | (1) வேங்கடகிருஷ்ணன் (பார்த்தஸாரதி) [அநிருத்தன் ப்ரத்யும்நன் பலராமன் ஸாத்யகி] | ருக்மிணிப்பிராட்டி |
| | | (2) மந்நாதன், ரங்கநாதன் (என்னையாளுடை அப்பன்) | வேதவல்லித்தாயார் |
| | | (3) அழகியசிங்கர் (தெள்ளியசிங்கர்) | |
| | | (4) சக்ரவர்த்தித் திருமகன் (ஸ்ரீராமன்) [இளையபெருமாள் பரதன் சத்ருக்னன் மைதிலி] | |
| | | (5) தேவப்பெருமாள் | |
| 22. | திருக்கடிகை (சோளசிங்கபுரம்) | யோகாந்ருஸிம்ஹர் | அமிர்தவல்லி |

## வடநாட்டுத் திருப்பதிகள்-12

| | | | |
|---|---|---|---|
| 1. | திருவேங்கடம் (திருமலை-திருப்பதி) | திருவேங்கடத்தான் | அலர்மேல்மங்கை |
| 2. | சிங்கவேள்குன்றம் (அஹோபிலம்) | நரசிம்ஹன் | லக்ஷ்மிநாச்சியார் |

| | | | |
|---|---|---|---|
| 3- | திருவயோத்தி | ரகுநாயகன் (சக்ரவர்த்தி திருமகன்) | ஸீதாபிராட்டி |
| 4. | நைமிசாரண்யம் | தேவராஜன் | ஸ்ரீஹரிலக்ஷ்மி (புண்டரீகவல்லி) |
| 5. | சாளக்கிராமம் | ஸ்ரீமூர்த்திப்பெருமாள் | ஸ்ரீதேவிநாச்சியார் |
| 6. | வதரியாச்சிரமம் (பதரிகாச்ரமம்) | பதரீநாராயணன் | அரவிந்தவல்லி |
| 7. | திருக்கண்டங்கடிநகர் (தேவப்ரயாகை) | நீலமேகப்பெருமாள் புருஷோத்தமன் | புண்டரீகவல்லி |
| 8. | திருப்பிருதி(நந்தபிரயாகை) | பரமபுருஷன் | பரிமளவல்லி நாச்சியார் |
| 9. | துவாரகை | கல்யாணநாராயணன் | கல்யாண நாச்சியார் அஷ்டமகிஷிகள் |
| 10. | வடமதுரை (கோவர்த்தநம்) | கோவர்த்தநேசன் | சத்தியபாமை |
| 11. | திருவாய்ப்பாடி (கோகுலம்) | நவமோஹனகிருஷ்ணன் | ருக்மிணிப்பிராட்டி |
| 12. | திருப்பாற்கடல் | க்ஷீராப்திநாதன் | கடல்மகள் நாச்சியார் |

## திருநாடு-1

| | | | |
|---|---|---|---|
| 1. | பரமபதம் | பரமபதநாதன் | பெரியபிராட்டியார் |

## ஆழ்வார்கள், ஆசாரியர்கள் அவதரித்த ஸ்தலங்கள்

1. மயிலாப்பூர் பேயாழ்வார் திருவவதாரம்
2. திருமழிசை திருமழிசை ஆழ்வார்
3. திருவஞ்சைக்களம் குலசேகர ஆழ்வார்
4. திருமண்டங்குடி தொண்டரடிப்பொடியாழ்வார்
5. திருக்குறையலூர் திருமங்கைமன்னன்
6. காட்டுமன்னார்கோயில் ஸ்ரீமந்நாதமுனிகள், ஆளவந்தார்
7. பூவிருந்தவல்லி திருக்கச்சிநம்பிகள்
8. ஸ்ரீ பெரும்பூதூர் ஸ்ரீபாஷ்யகாரர்
9. கூரம் கூரத்தாழ்வான்
10. மழலைமங்கலம் எம்பார்
11. பச்சைப்பெருமாள்கோயில் முதலியாண்டான்
12. சிக்கில்கிடாரம் (ஆழ்வார் திருநகரி) மணவாளமாமுனிகள் அவதாரம்
13. ராஜமன்னார்குடி மணவாளமாமுனிகள் உகந்தக்ஷேத்திரம்
14. ஸ்ரீமுஷ்ணம் ஸ்வயம் வ்யக்த ஸ்தலம்

**ஸ்ரீ உடையவர் திருவடிகளிலே ஆச்ரயித்த எழுபத்து நான்கு ஸிம்ஹாஸநாதிபதிகள்.**

1. ஸ்ரீ ஆளவந்தார் குமாரர் சொட்டை நம்பி
   அவர் குமாரர் என்னுச்சான்
   அவர் குமாரர் பிள்ளை அப்பன்
2. ஸ்ரீ பெரியநம்பி குமாரர் ஸ்ரீ புண்டரீகர்
3. ஸ்ரீ திருமலை யாண்டான் குமாரர் சுந்தரத் தோளுடையான்
4. ஸ்ரீ பெரிய திருமலைநம்பி குமாரன் ராமானுஜன்
5. திருமலை நம்பி ஸ்வாமி
6. ஸ்ரீ கூரத்தாழ்வான் குமாரர் பட்டர் ஸ்வாமி
   அவர் குமாரர் சீராமப் பிள்ளை
7. ஸ்ரீ முதலியாண்டான்
   அவர் குமாரர் கந்தாடை ஆண்டான்
8. நடுவிலாழ்வான்
9. கோமடத்து ஆழ்வான்
10. திருக்கோவலூர் ஆழ்வான்
11. திருமோகூர் ஆழ்வான்
12. பிள்ளை பிள்ளை ஆழ்வான்
13. நடாதூர் ஆழ்வான்
14. எங்கள் ஆழ்வான்
15. அநந்தாழ்வான்
16. மிளகாழ்வான்
17. நெய்யுண்டாழ்வான்
18. சேட்லூர் சிறியாழ்வான்
19. வேதாந்தி ஆழ்வான்
20. கோயிலாழ்வான்
21. உக்கலாழ்வான்
22. அரணபுரத்து ஆழ்வான்
23. எம்பார்
24. கிடாம்பி ஆச்சான்
25. கணியனூர் சிறியாழ்வான்
26. ஈச்சம்பாடி ஆச்சான்
27. கொங்கிலாச்சான்
28. ஈச்சம்பாடி ஜீயர்
29. திருமலை நல்லான்
30. சட்டம்பள்ளி ஜீயர்
31. திருவெள்ளறை ஜீயர்
32. ஆட்கொண்டவில்லிஜீயர்
33. திருநகரிப் பிள்ளை
34. காராஞ்சி சோமயா ஜீயார்
35. அலங்கார வேங்கடவர்

36. நம்பிக்கருள் தேவர்
37. சிறுப்பள்ளி தேவராஜ பட்டர்
38. பிள்ளையுறங்கை உடையர்
39. திருக்குருகைப் பிரான் பிள்ளான்
40. பெரியகோயில் வள்ளலார்
41. திருக்கண்ணபுரத்தரையர்
42. ஆசூரிப் பெருமாள்
43. முனிப் பெருமாள்
44. அம்மங்கிப் பெருமாள்
45. மாருதிப் பெரியாண்டான்
46. மாறொன்றில்லா மாருதிச் சிறியாண்டான்
47. சோமாஜியாண்டான்
48. ஜீயராண்டான்
49. ஈச்வராண்டான்
50. ஈயுண்ணிப் பிள்ளையாண்டான்
51. பெரியாண்டான்
52. சிறியாண்டான்
53. குறிஞ்சிபுரச் சிறியாண்டான்
54. அம்மங்கியாண்டான்
55. ஆளவந்தார் ஆண்டான்
56. அருளாளப்பெருமாள் எம்பெருமானர்
57. தொண்டனூர் நம்பி
58. மருதூர் நம்பி
59. மழுவூர் நம்பி
60. திருக்குறுங்குடி நம்பி
61. குரவை நம்பி
62. முடும்பை நம்பி
63. வடுக நம்பி
64. வங்கிபுரத்து நம்பி
65. ஸ்ரீ பராங்குச நம்பி
66. அம்மங்கி அம்மாள்
67. பருதிக்கொல்லை அம்மாள்
68. உக்கலம்மாள்
69. சொட்டையம்மாள்
70. முடும்பையம்மாள்
71. கொமாண்டூர் பிள்ளை
72. குமாண்டூர் இளையவல்லி
73. கிடாம்பிப் பெருமாள்
74. ஆர்க்காட்டுப் பிள்ளான்

# நந்தா விளக்கு

(N. C. பார்த்தஸாரதி, காரியதரிசி, வேத அத்யாபக கோஷ்டி, திருவல்லிக்கேணி)

நமது கோஷ்டியின் 760ஆவது வருடக் கொண்டாட்டப் பூர்த்தியன்று (18-4-82) ஸ்ரீ ஜகதாசார்ய மஹாமஹிமோபாத்யாய பத்மவிபூஷண மஹாவித்வான் காஞ்சி பிரதிவாதிபயங்கரம் ஸ்ரீ. உ. வே. அண்ணங்கராசார்யர் ஸ்வாமியை "சுகமினி தாள்வர் வானுலகே" என்கிற [ஸ்தல பதிகத்தின்] பலச்ருதியைப்பற்றி உபன்யஸிக்க எழுதியிருந்தேன். ஸ்வாமியின் 14—4—82 தேதிய பதிலில் சிலவற்றைக் குறிப்பிடுகிறேன்.

"தேவரீருடைய ஸ்ரீமுகம் கிடைத்தது. அடியேனுக்குப் பிணி ஒன்றுமில்லை. வயதிற்கேற்ற அசக்தி. ஸ்ரீ. உ. வே. T. A. T. ஸ்வாமி, பார்த்தஸாரதி ஐயங்கார் ஆகிய இருவரின் நிர்பந்தம், பிரார்த்தனைக் கிணங்க ஹ்ருதயபூர்வமாகத்தான் ஒப்புக் கொள்கிறேன். என் செய்வேன். ஒன்றும் தோன்றவில்லை, மருத்துவனாய் நின்ற மாமணிவண்ணனும், ஆர்மருந்தினியாகு வார் என்றவனும் வந்தாலும் என்ன பண்ண முடியும். அதற்காக நான் கோபிக்கவில்லை, வருந்தவில்லை. என்னை அன்புடன் எதிர்பார்க்கும் எல்லோருக்கும் ஸமாதானம் சொல்லுக. பார்த்தன் தன் தேர் முன் நின்றானுக்கு "தூவிரிய மலருழக்கி" பாசுரத்தை விண்ணப்பம் செய். நான் இயற்கையில் உத்ஸாஹி. இப்படி எழுதக்கூடியவனல்ல என்று உன் மனமறியும். இவ்வளவு எழுதியும் அடியேன் மனம் அங்கேதான் உள்ளது. தேவரீர்களுடைய மனோரதத்தைப் பூர்த்தி செய்கிறேன்.

இப்படிக்கு
'அண்ணா'

அதன்படியே ஏள்ளியிருந்து சரியாக இரண்டுமணிநேரம் ஸந்நிதி திருவாய்மொழி மண்டபத்தில் வீரிய முழக்கம் செய்தார். இதில் சில காட்சிகளைக் கீழே காணலாம். இது மிகப்பெரிய பக்தகோடிகளின் மத்தியில் ஸாதித்த கடைசி உபன்யாஸம் எனலாம்.

அவரைப்பற்றிச் சிலவற்றை எழுத விரும்புகிறேன். உலகினர் உய்வதற்காக ஆழ்வார்கள் அருளிய நாலாயிர திவ்ய ப்ரபந்தத்தையும், அவைகளின் விவரணங்களையும், ஸத் ஸம்ப்ரதாய கிரந்தங்களையும், நாதமுனிகள் தொடங்கி மணவாள மாமுனிகள் பர்யந்தம், அத்தனை ஆசாரியர்கள் பிரபாவங்களையும் வெளியிட்டமை ப்ரஸித்தம். விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தை வளர்த்து எம்பெருமானார் தர்சனத்திற்கு ஆணிவேராக ஸ்ரீபாஷ்யமும், பகவத் விஷயமும், ரஹஸ்ய கிரந்தங்களும், ஸ்தோத்ர பாடங்களும் விளங்குகின்றன. வேதங்களும், இதிஹாஸ புராணங்களும் இவைகளுக்கு ஆதாரமாய் உள்ளன.

இவை யாவற்றையும் "ஆழியுட்புக்கு முகந்து கொடார்த்து ஏறி" என்கிறபடி உபய வேதாந்தமாகிற ஆழ்கடலில் ஆழ்ந்து, ஏற்பதற்கு அரியனவான கருத்துக்களை ஏற்றுச் சிறிதேனும் பிறழாமல் தமது மனத்திலே தேக்கி, தரம் பாராது பொழியும் மேகம்போல் நன்றாய் மெய்யான கருத்துக்களை அவ்வப்போது வெளியிட்டுவந்த பெருமைவாய்ந்த ஸ்வாமி ஒருவர் இருந்தார் எனில் அது அந்த ஸ்வாமியைத்தான் குறிக்கும். வாய்ப்பைப் பெற்றது நம்முடைய பாக்யம். பண்டிதர்களும், பாமரர்களும் ஏற்கும் வகையில் உலகினர் உய்ய மணிப்பிரவாளத்தில் உள்ள வ்யாக்யானங்களை எளிய நடையில் எழுதியளித்த மஹான் அவர். இவரை

"நடமாடும் நூல்நிலையம்'' என்றே பலர் போற்றினர். அவரை நேராகக் காணவும், அவரது உபதேச மொழிகளைக் கேட்கும் வாய்ப்பையும் பெற்றது நமது பாக்கியம் என்றே சொல்லவேண்டும்.

நிற்க, வைணவ உலகின் பொற்காலத்தில் வாழ்ந்துவந்த பட்டர், நஞ்சீயர், நம்பிள்ளை, பெரியவாச்சான்பிள்ளை, வடக்குத் திருவீதிப்பிள்ளை, வேதாந்தாசாரியர், எம்பெருமானாரின் அபராவதாரமாய் விளங்கிய மணவாளமாமுனிகள் ஆகிய இவர்களை நாம் காணவில்லை. ஆனால் அவர்களது பேராற்றல் ஒருங்கே இணைந்து வ்யாக்யான சக்ரவர்த்திகள் ஆகிய அவர்கள் அத்தனைபேரும் திரண்டெழுந்து கொண்டதோர் வடிவாய் இந்த ஸ்வாமி விளங்கினார் என்பது மிகையாகாது. நாம் அவர்களைக் காணவில்லை, இவரைக் காணும் பாக்யம் பெற்றோம்.

காஞ்சி P. B. A. ஸ்வாமிக்கும், திருவல்லிக்கேணிக்கும் பலவகையில் சம்பந்தம் இருந்து வந்தது. அவ்வப்போது உத்ஸவ ஸமயங்களில் வேதபாராயண கைங்கர்யத்தில் அன்வயித்ததோடு நில்லாமல் இங்கு இயங்கிவரும் வேதவேதாந்த வர்த்தனீயில் பரீக்ஷ்யராகவும், பரீக்ஷகராகவும். உபந்யாஸகராகவும் ஏறக்குறைய எழுபது ஆண்டுகள் நீண்ட தொடர்பு கொண்டவர் ஆவர். 1977-ஆம் ஆண்டு எம்பெருமானார் அவதரித்த பிங்கள ஆண்டில் இம் மஹானின் நியமனத்தாலேதான் உலகம் முழுதும் மூலைமுடுக்குகளிலெல்லாம் உடையவரின் பெருமைக்கேற்பக் கொண்டாடப்பட்டது. இங்குத் திகழ்ந்துவரும் ஸ்ரீ உடையவர் கைங்கர்யசபை, பார்த்தஸாரதி ஸ்வாமி ஸந்நிதியில் உபயத்தைச் மிகச்சிறப்பாக நடத்தியதோடு எம்பெருமானார் வைபவத்தைப்பற்றிச் சென்னை நகரில் பல இடங்களில் உபந்யாஸங்கள் நடத்தியமை அனைவரும் அறிந்ததே. அதில் 'வீனஸ் காலனி'யில் நடந்த மாநாட்டில் ஸ்வாமி கலந்துகொண்டு திருவல்லிக்கேணி வாஸிகளை வாழ்த்தியருளினார். அந்தத் திருவிழாவின் நினைவு மலர் வெளியிட்டவன்று பேரார்வத்துடன் கலந்துகொண்டு அதன் முதல் பிரதியைத் திருவுள்ளம் உகந்து அப்போதைய ஆளுநர் திரு. பிரபுதாஸ் பட்வாரியிடமிருந்து ஏற்றுக்கொண்ட வைபவத்தையும் கீழ்ப்பிரசுரித்துள்ள புகைப்படத்தில் காணலாம்.

1982-இல் நமது கோஷ்டியின் 760-ஆவது வருடக் கொண்டாட்டத்தில் நடந்த 10 நாள் உபன்யாஸங்களில், கடைசிநாள் உபன்யாஸத்தில் ''மன்னு தண் பொழிலும்'' என்னும் பலச்ருதி பாசுரத்தை, தனது தள்ளாத நிலையில் ப்ரவசனமே கடமையாகக்கொண்டு எழுந்தருளியிருந்து, திரளான பக்தர்களின் மத்தியில் யாவரும் வியக்கும்படி உபயஸித்தருளின ஸௌலப்யத்தை யாராலும் மறக்க முடியாது.

இவர் அருளிய க்ரந்தங்கள், எளிய நடையில் ஸாதித்த வ்யாக்யானங்கள், அவ்வப்போது சந்தேகங்கள் நிவர்த்திக்காக வெளியிட்ட நூல்கள், பல பாஷைகளில் வெளியிட்ட இராமானுசன் பத்திரிகை, இவையெல்லாம் நமது குலதனமாகும். இந்தத் தனத்தை யாவருக்கும் பயன்படுமாறு வளர்த்து, மறுபடி அச்சடித்து, பல மொழிகளில் வெளியிட்டு, ப்ரசுரங்கள்மூலமும், உபன்யாஸங்கள் மூலமும் இவர் நூல்களை ஸ்தாபிக்கச் செய்வது நமது கடமை. இவையே தமக்கு உயிராக வாழ்ந்துவந்த இந்த ஸ்வாமி என்றென்றும் நமது உள்ளத்திலே குடிகொண்டிருப்பர் என்பது திண்ணம். இவ்வாறு விளங்கிய இவர் ஸ்ரீ வைஷ்ணவ ஸம்ப்ரதாயத்திற்கு நந்தா விளக்கு.



ஸ்ரீ உ. வே. பிள்ளைலோகம்
பாஷ்யகாரர் ஸ்வாமி



உ. வே. அஷ்ட கோத்ரம் வேங்கடாசாரியர்
(பட்டப்பா ஸ்வாமி, ஸ்ரீபெரும்பூதூர்)

திருவல்லிக்கேணி ஸ்ரீ பார்த்தசாரதி சந்நிதி தேவஸ்தான வேத அத்யாபக கோஷ்டி

# சில நினைவுகள்

(திருவாலி V. R. வரதநாராயண அய்யங்கார்)

அறியாக் காலத்துள்ளே அடிமைக் கண் அன்பு செய்வித்து, அருளிச்செயலை இராப்பகல் ஓதுவித்து, பயிற்றுவித்து பணிமானம் பிழையாமே பணிகொண்டதெல்லாம் அடியேனைப் பிறப்பித்த தந்தையும் நம் கோஷ்டியில் முன்னுள் அத்யாபகராய் இருந்து, கட்டியம், அருளப்பாடு, புராணம் இவைகளையும் சேவித்துக் கொண்டிருந்து 1958-இல் பரமபதித்தவருமான ஸ்ரீமான் திருவாலி இராமாநுஜாசாரியர் ஆவர்.

அடியேனுக்குப் பிதாவும் ஆசாரியனுமான அவரிடம் கேட்டு அறிந்த சில அறிவுரைகளை இங்கே விண்ணப்பிக்கிறேன்.

1. (i) கோஷ்டியில் வயதில் சிறியவர்கள், பெரியவர்களுக்கு முக்கியமான இடங்களை விட்டுக்கொடுத்துக் கௌரவிக்க வேணும்.

(ii) அவசியம் இருந்தாலொழிய பின்னடி சேவையிலேயே அன்வயிக்க வேண்டும்.

(iii) பெரியோர்களை முன்னிட்டுச் சற்றுப் பின்பாக உட்காரவேண்டும்.

(iv) சர்ச்சைக்குள்ள விஷயங்கள் விவாதிக்கும்போது தாங்களும் அவசியமானல் கலந்துகொண்டு நிதானமாகப் பணிவுடன் அபிப்பிராயங்களை வெளியிட வேண்டும்.

(v) பெரியோர்களுடைய குரலில் கலந்து சேவிக்கவேண்டும். தங்கள் குரல்தான் உயரவேண்டும் என்று நினைப்பது தவறு.

இன்னும் பல விஷயங்கள் அவரிடம் தெரிந்துகொண்டிருந்தாலும், நெஞ்சில் நிலைப்பவை இவை.

2. மற்ருெரு ரஸமான அனுபவம் ஸ்ரீமான் உ. வே. T. A. வரதாசாரியர் ஸ்வாமி அத்யாபககோஷ்டித் தலைவராக இருந்த காலத்தில், ஒரு ஸ்வாமி கோஷ்டியில் முறைப்படி அன்வயிக்கவில்லை. அவருக்கு ப்ரஸாதம் ஸாதிக்கலாமா என்ற கேள்விக்குப் பதில் அளிக்கையில் வேடிக்கையாக—

"நம் கோஷ்டியில் 4000 பாசுரங்களுக்கு 2000 பாசுரங்கள் தெரிந்தால் போதும் அத்யாபகத்தில் சேரலாம்.

அவற்றுள் பாதியில் அன்வயித்தால் போதும், ஆக 1000 பாசுரங்கள் தேறும். அதிலும் முன்னடியிலேயோ, பின்னடியிலேயோ ஏதேனும் ஒன்றில் அன்வயிக்கலாம். மீதி 500 தான் உள்ளது.

இந்த மீதியிலும் கோஷ்டியில் எழுந்தருளியிருந்தால் போதும், வாய்விட்டுச் சேவித்துத்தான் ஆகவேண்டும் என்பதில்லை.

ஆகையால் அந்த ஸ்வாமிக்கு ப்ரஸாதம் நன்ருகச் சாதிக்கலாம் என்ருர்.

இவ்விஷயத்திற்கு இன்றும் சான்று உண்டு.

3. இன்னும், ஒரு சமயம் அடியேன் 10, 12 வயதிற்குள் இருக்கும்போது, திவ்யப்ரபந்தம் ஓரளவு சேவிக்கும் நிலையில், ஒரு அத்யாபக கோஷ்டி பொதுக்கூட்டம் ஸ்ரீவானமாமலை மடத்தில் நடைபெற்றது. அப்போது அடியேனும் அடியேனுடைய வயதொத்த சிறுவர்களும் அங்குச் சற்றுத் தள்ளியிருந்துகொண்டு நடந்த விவரங்களைக் கவனித்துக்கொண்டிருந்தோம். அப்பொழுது ஒரு ஸ்வாமி "உங்களுக்கு இங்கே என்ன வேலை" என்று கடிந்தார். உடனே ஸ்ரீ T.A. வரதாசாரியர் ஸ்வாமி, என்ன அப்படி சாதித்தது, அவர்கள் நாளைய அத்யாபகர்கள் அன்ரோ! என்ருர். அவர் வாக்கு அடியேன் விஷயத்தில் இன்று பலித்துள்ளது.

4. ஸ்ரீ வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி நம் கோஷ்டியின் தலைவராக எழுந்தருளியிருந்தகாலத்தில், அடியேனைப்போன்ற முதிராத சொற்களுடைய சிறுவர்களைப் பல இடங்களில் திருமொழி சேவிக்கும்போது அர்த்தங்களையும் எதுகை மோனை இவைகளையும் காண்பித்து "வயல்சூழ்" "பொழில்சூழ்" அடைந்துய்ந்துபோனேனே, அடியேன் கண்டுகொண்டேனே, கண்டுகொண்டு திளைத்தேனே "கருவார் கற்பகத்தை" "கலையார் சொற்பொருளை" இன்னும் பல இடங்களில் அழகாகத் திருத்திப் பணிகொண்டது இன்னும் நெஞ்சில் நிலைத்துள்ளது,

5. ஸ்ரீவைகுண்டவாசியும் ஸ்ரீ உ. வே. பரமஹம்ஸேத்யாதியுமான பெரிய கேள்வி ரங்கராமாநுஜ ஜீயர் ஸ்வாமி, இங்கே பூர்வாச்ரமத்தில் அத்யாபக கோஷ்டித் தலைவராக எழுந்தருளியிருந்த போது, அத்யாபககோஷ்டியில் சதனுஷ்டானத்துடன் இருப்பவர்களும், கோஷ்டியில் அத்யாபக ப்ரஸாதம் சாதிக்கும் போது கைசோதித்துக்கொண்டுதான் சாதிக்கவேண்டும் என்று திருத்திப் பணிகொண்டார். அந்த அனுஷ்டானம் இன்றும் நடைமுறையில் உள்ளதை நாம் அறிவோம்.

6. ஸ்ரீ. உ. வே. தாமல் விஜயராகவாசாரியர் ஸ்வாமி வேதபாராயண கைங்கர்யத்தைத் தவருமல் நிர்வஹித்து, வேத வேதாந்தவர்த்தினீ பாடசாலையில் அடியேன் சிறுவனுய் இருக்கும்போது சுமார் 20 பேருக்கு ஸ்வரம் பிசகாமல் உபயுக்தமாக வேதத்தைச் சந்தை சொல்லிக்கொடுத்தார். அதில் விசேஷம் என்ன என்ருல், ஒரு ஸ்வரம் தப்பினுலும் தொடையில் ஒரு அடி விழும். அதை நினைத்தால் இன்றும் வலிக்கும். ஆனல் அந்த ஸ்வாமியின் கடாக்ஷத்தில் அது மிகவும் குளிர்ந்துவிடும். எப்படி என்ருல் அடியோங்கள் கோஷ்டியில் ஸுஸ்வரமாகச் சேவிக்கும் போது மகிழ்ச்சி பொங்கும் கிருபையுடன் அடியோங்களைக் கடாக்ஷிப்பார். அதற்கு ஈடு இணையுண்டோ!

இன்னும் பல நினைவுகள்—பன்னி உரைக்குங்கால் பாரதமாய் நீளும். ஆகையால் "ஊழிதோறூழி ஓவாது வாழிய என்று யாம் தொழ இசையுங்கொல்" என்று ஆழ்வார் பாரித்தபடி நம் கோஷ்டி பல்லாண்டு பல்லாண்டாகக் குடிகுடி வழிவந்து ஒழிவில்காலமெல்லாம் வழுவிலா அடிமைசெய்யவேண்டும் என்று ஸ்ரீபார்த்தசாரதி திருவடிகளில் பிரார்த்திக்கிறேன்.

# அத்யாபகரொருவரின் அனுபவம்

(கோஷ்டி காரியதரிசி)

அத்யாபக கோஷ்டியில் எல்டர்லி மெம்பர் ஸ்ரீ. உ. வே. குவளை ராமானுஜா சார் ஸ்வாமியை மலரில் அச்சிட உம் முடைய அனுபவத்தில் ஏதாவது சொல் லும் என்று கேட்டதற்கு அவர் சொன்ன பதில்:

நமது கோஷ்டிக்குப் பழைய காலத் தில் சட்டமோ, நியமமோ ஒன்றும் கிடை யாது. அத்யாபகர்கள் யார் யார் எப் போது வந்தாலும், ப்ரஸாதம் விநியோ கிக்கும் ஸமயம் இருந்தால் போதும். எல்லோருக்கும் கொடுக்கப்பட்டுவந்தது. அந்தக்காலம் பிரஸாதமும் நிரவதிகமாய்க் கிடைக்கும்.

அப்படியிருக்க, இப்போதுள்ள சட்ட திட்டங்கள் எப்படி வந்தது? என்று கேட் டேன். அதற்குப் பதில் :

அந்தக்காலத்தில் அத்யாபகர்கள் சாயங்காலம் இயல் முடிந்ததும் ஸந்தியா வந்தனம் செய்யப் புஷ்கரணிக்குப் போ வார்கள். ஆனால் வேதபாராயண ஸ்வாமி களோ, பாராயணம் பண்ணிக்கொண்டே பெருமாள் உள் மண்டபத்தில் கீழே இறங்கிய பிறகுதான் முடிப்பது வழக்கம். வேதபாராயணகாரர்கள் புஷ்கரணிக்குச் சென்று ஸந்தியாவந்தனம் செய்துவரு வதற்குள் அத்யாபகர்கள் ஸேவைமுடித்து அநேகநாள் பிரஸாதம் ஸ்வதந்திரம் வாங் கிக்கொண்டு போய்விடுவர். ஆக வேத பாராயணகாரர்கள் கைங்கர்யம் செய்தும் ஸ்வதந்திரம்கூடக் கிடைக்காமலேயே போய்விடும். சிலர் கைங்கர்யம் முடியும் தருணத்தில் வந்து பலனை அடைந்து வந்தனர். அப்போது வானமாமலைமடம், திருவாராதன ஸ்வாமி தெய்வநாயகம் ஐயங்கார் இதைப்பற்றி எல்லா அத்யாப கர்களுடன் அவ்வப்போது சர்ச்சைசெய்து வந்தனர். ஆகவே, 28—10—1934 தேதியில் நடந்த மீட்டிங்கில், ஸ்ரீ. உ. வே. ப. ரங்கப் பங்கார் ஸ்வாமி, T.A. வரதாசார் ஸ்வாமி, P. A. பார்த்தஸாரதி ஐயங்கார் ஸ்வாமி ஆகிய மூவர் அடங்கிய ஸப் கமிட்டியை நியமித்து, சட்டதிட்டங்களை, எல்டர்லி அத்யாபக கமிட்டியாருக்கு அனுப்பவும், அவர்கள் ஆமோதித்த பின், பொது கோஷ்டியின் மூலம், மூன்று ரீடிங் கொடுத்து அங்கீகரிக்கவும் செய்தனர் என்றார்.

பிறகு, அவரே "ஒரு வேடிக்கை கேளும்" என்று ஆரம்பித்து அவர் சொன் னது:— திருமொழி ஸேவா காலங்களில் பல இடங்களில் கவலைகள், சந்தேகங்கள் வரும். பெரியோர்கள் மத்தியில் பயந்து, பயந்து ஸேவிப்பேன். தமிழ் பண்டிட் வை. மு. கோபாலகிருஷ்ணமாசாரியர் கோபப்படாமல், முகம் கோணாமல், யாருக் கும் மனம் புண்படாமல், சிரித்துக் கொண்டே என்னைப்பார்த்துச் சொன் னது ஞாபகத்திற்கு வருகிறது.

"திருமங்கை மன்னன் இயற்கையை வர்ணிக்கிறார். ஏன் கஷ்டப்படுகிறாய், வண்டு கள்ளுகுடித்தால் போதையிலிருக் கும், பெண்வண்டைப் பார்த்தால் ஆண் வண்டு கூத்தாடும், வண்டுகள் இசைபாட அன்னம் உறங்கும், வண்டு ஆடும். குயில் கூவும், மயில் ஆலும்" ஆக எதைக்கண்டும் மிரளாமல் முன்னடியைப் பார்த்து, எதுகை மோனை கவனித்து அர்த்தம் புரிந்து, கவனித்து ஸேவி" என்றார். அதன்படி நடந்தேன். அனுபவம் ஆக ஆக அடியேனுக்குத் தப்பே வரவில்லை. வயதில் முதிர்ந்த பெரியோர்கள் முன்னடி ஸேவிப் பர். நாங்கள் பின்னடிதான் ஸேவிப்போம்.

நாங்கள் தப்பித் தவறி முன்னடி ஸேவித்தாலும், ஏதாவது தப்பாக ஸேவித்தாலும், பாட பேதமாக ஸேவித் தாலும் முதியோர்கள் திரும்பிப் பார்ப்பர். பெரியோர்களிடம் பயத்தோடும் பணி வன்புடனும் நடப்போம்.

"பெரியோர்க்கு ஆட்பட்டக்கால் பெறுத பயன் பெறுமாறு" என்றபடி பலனை அடைந்தேன். இப்போது இந்தச் சட்டங்கள் மிக அவசியம் என்று தோன்றுகிறது.

## மறக்கலாகா நினைவுகள்.

(ஸ்ரீ.உ. வே. C. பார்த்தசாரதி ஐயங்கார், காரியதரிசி)

காஞ்சி ஸ்ரீ. உ. வே. பிரதிவாதி பயங்கரம் அண்ணங்கராசாரியர் ஸ்வாமி யுடன் பல அனுபவங்களில் சிலவற்றைக் குறிப்பிடுகிறேன்.

(1) காஞ்சி ஸ்ரீ. உ. வே. PBA ஸ்வாமி

''நீறு செவ்வே யிடக்காணில்
நெடுமாலடியார் என்றோடும்''
''திருவுடை மன்னரைக்காணில்
திருமாலைக் கண்டேனே''

என்கிற பாசுரப்படி கோஷ்டிக்கு ஏள்ளும் ஸ்வாமிகள் எப்போதும் பளிச்சென்று பன்னிரண்டு திரு நாமத்துடன் ஸேவை ஸாதிக்க வேண்டும் என்ற எண்ணம் உடைய வர். அவர் சொன்ன கதை: கலெக்டர், கவர்னர் வருங்காலத்து போலீஸ், மிலிடரி பாரேட் நடக்கும். அதற்கு ஒருநாள் முன்பு ரிஹர்ஸல் பாரேட் நடக்கும். அதன் தலைவர் பாரேட் செய்பவரில் சிலர் கன்னத்தைத் தட விப்பார்ப்பர். சொர, சொர என்றிருந் தால் பளிச்சென்று கன்னத்தில் அறை விழுமாம். சாதாரண மனிதருக்கு அப்படி என்றால் நாம் தேவராஜாவின் பதாதிகள் (ஸைன்யம்) நாம் எப்படி இருக்கவேண்டும் என்று யோசி என் றார்.

(2) அருளிச்செயலை நன்கு அனு பவிக்கத் தெரிந்தவர்:

அங்கு மணவாளமாமுனிகள் ஸந் நிதியில் உரத்த குரலில், நிதானமாக ஸேவாகாலம் ஆரம்பித்துச் சிலரை அனுப்பி, இது எவ்வளவு தூரம் கேட் கிறது என்று பார்த்துவரச் சொல்ல, அவர்கள் வந்து ''மேல கோபுரவாசல் வரை'' கேட்கிறது என்றவுடன், இப்படியே பண்ணிக்கொண்டிருங்கள் என்று தாமே போய் அதை அனு பவிப்பர்.

(3) பொய், மெய்யைச் சுலப மாக அறிபவர்: பொய்சொல்லித் தப்ப முடியாது,

காஞ்சி வைசாகோத்ஸவத்தில் சென்று ஸ்வாமியைப் பாடசாலையில் ஸந்தித்தேன்.

கேள்வி: பாச்சுவா? எப்போது வந் தாய்?

பதில்: நேற்று ராத்திரி வந்தேன்.

கேள்வி: மேற்கே கோஷ்டிக்குப் போனாயா?

பதில்: போனேன்.

கேள்வி: என்ன பாட்டு ஆரம்பித் தார்கள்?

பதில்: பாதி கோஷ்டியில் கலந்து கொண்டேன்.

கேள்வி: என்ன பாட்டு முடித்தார் கள்?

பதில்: நாச்சியார் திருமொழி 3ஆம் பதிகம் முடிந்தது. நாளை ''தெள்ளி யார் பலர் கைதொழும் தேவ னார்'' ஆரம்பிக்க வேண்டும்.

அவர் தீர்மானம்: ஆறும் திருநாள் என்று பதில் அப்படிச் சொன்னுயா?

**வேலை வாங்குவதில் கெட்டிக்காரர் :**

(4) யாரானும் சிறுவர் அவரிடம் சென்றுல்:

இந்தக் கடுதாசியைத் தபால் பெட்டியில் போடு என்று கொடுப்பர். உடனே தபால் பெட்டியில் என்ன டைம் போட்டிருக்கிறது என்று வந்து சொல் என்று உத்தரவிடுவார்.

(5) அவருக்கு யானைக் கண்: பாம்புக் காது:

எத்தனை ஸ்வாமிகள் அணி அணியாகக்கூடி அலை அலையாகச் சென்றுலும் ஒருதரம் முதல் வரிசையிலிருந்து திரும்பிப் பார்த்தாரானுல் யார் யார் 12 திருமண் இட்டுக்கொள்ளவில்லை என்று ''சட்''டென்று சொல்லிவிடுவர்.

எவ்வளவு கூட்டத்தில் ஸேவா காலம் பண்ணினுலும் கூர்மையாய்க் கவனித்து, தப்பு சொல்பவரைக் கூப்பிட்டுத் திருத்தும் தன்மை உடையவர்.

(6) ஒரு பெரிய பணக்காரர் இல்லத்திற்கு ஸேவாகாலத்திற்குச் சென்று கொண்டிருந்தார். அந்தக் காரில் அடியேனும் போனேன். கார் ஓட்டிச் சென்றவர் தாம் ஸித்தமாயிருப்பதற்காகத் திரும்புவது எத்தனை மணிக்கு என்று கேட்டார். அதற்கு அவர் பதில் ''என் உயிர் அவன் கையதே'' ''அவன் கையதே எனதாருயிர்'' (திருவாய் : 9-5-2, 3) அவர் விட்டபோது தான் வர முடியும். எல்லோரும் சிரித்தனர்.

(7) 30 வருடம் முன்பு ஓங்கோல் அருகே கொத்தப்பட்டணம் என்கிற இடத்தில் திருப்பதி ஸ்ரீ. உ. வே. யாமுனாசார் ஸ்வாமி நடத்திவைத்த பெருமாள் ஸந்நிதி ஸம்ப்ரோக்ஷணத்திற்குச் சென்றிருந்தேன். வேத அத்யாபக ஸ்வாமிகளுக்குக் கையில் கங்கணம் கட்டி, மஞ்சளில் நனைத்த வேஷ்டி உத்தரீயம் கொடுத்து எல்லாவேளைகளிலும் அதையே தரிக்க வேண்டும் என்று கட்டளையிட்டனர். அது தேசாசாரம். அப்படியே செய்தோம்.

மறுநாள் காலை ஸ்ரீ. உ. வே. PBA ஸ்வாமி ஏள்ளினுர். எங்கள் மத்தியில் நின்றுகொண்டிருந்த வயதான காஞ்சி மடவிளாகம் கோபாலாசாரியரைக் கூப்பிட்டு அவ்வளவு கூட்டத்தின் மத்தியில் மஞ்சள் துணியும், கங்கணமும் பூண்ட ஸேவையுடன் இருக்கிறீரே, தேவள் ஆத்துக்காரி வந்திருக்காளா? நான் உங்கள் கல்யாணத்தில் பார்க்கவில்லை. இப்போது பார்க்கலாம் என்று நினைத்தேன் என்று சிரிக்க வைத்தார். கோபாலாசார் ஸ்வாமி நேற்றையதினம் நீர் வந்திருந்தால் உமக்கும் அந்த மஞ்சள் துணி கொடுத்திருப்பார்கள். ஒருநாள் தள்ளி வந்தீரே என்று பதில் சொல்லி எல்லோரையும் சிரிக்கவைத்தார்.

(8) 20 வருடம் முன்பு மன்னார்குடி அண்ணுஸ்வாமி ஐயங்கார் ஸதஸ்ஸுக்கு முதல் தடவை சென்றிருந்தேன். அங்கு நிறைய ஸ்வாமிகள் குழுமியிருந்தனர். திவ்யபிரபந்த பரீக்ஷைக்கு ஆரம்பிக்கச் சொன்னுர்கள். பரீக்ஷகர் ஸ்ரீ.உ.வே. எம்பார் திருவேங்கடாசாரியர் ஸ்வாமி. [திருநாங்கூர் தீர்த்தகாரர். ஜீயர்பிள்ளை சீமாசு என்றுல் ப்ரபலமாகத் தெரியும்.] அப்போது தர்க்கம், வியாகரணம் பரீக்ஷ

கராகக் காஞ்சி PBA ஸ்வாமி ஏள்ளின தால் அவரையே திவ்யபிரபந்த பரீக்ஷையை நடத்தச் சொன்னார்கள். அவரும் சம்மதித்து வித்யார்த்தியாய் வந்திருந்தவரைக் கேட்டார்.

கேள்வி ; உமக்கு என்ன தெரியும்?

பதில் : எல்லாம் தெரியும்,

கேள்வி: சொல்லும் 'பல்லாண்டு பல் லாண்டு'

பதில்: 'பல்லாண்டு பல்லாண்டு'

கேள்வி: வண்ணமாடங்கள்

பதில்: வண்ணமாடங்கள்

கேள்வி: கதிராயிரமிரவி

பதில்: கதிராயிரமிரவி

கேள்வி: 'தையொரு திங்களும்'

பதில்: 'தையொரு திங்களும்'

கேள்வி: பூநிலாய

பதில்: பூநிலாய

கேள்வி: வாடினேன் வாடி

பதில்: வாடினேன் வாடி

கேள்வி: ஒழிவில்காலம்

பதில்: ஒழிவில்காலம்

கேள்வி: உலகமுண்டபெருவாயா

பதில்: உலகமுண்டபெருவாயா

வித்யார்த்தி மேலே ஒரு பதம்கூட சொல்லாமல் திகைத்து இவர் சொன் னதையே சொன்னார். ஸ்வாமி மேலே சொல்லு என்று,

கேள்வி: 'சொன்னால் விரோதமிது'

பதில்: 'சொன்னால் விரோதமிது'

கேள்வி: 'சொல்லமாட்டேன் அடி யேன்' (திருவாய் : 8-5-5)

பதில்: 'சொல்லமாட்டேன் அடியேன்'

காஞ்சி அண்ணாஸ்வாமி எப்படி முடித்தார் தெரியுமா?

''எற்றுக்கு நீ என் மருங்கில் வந் தாய்! எம்பெருமான் நீ எழுந்தருளே. (பெருமாள் திரு: 6-67) 'உமக் கொன்று சொல்லுகேன் கேண்மின்' உமக்கிங்கோர் பற்றில்லை கண்டீர் நட மின்' (பெரியாழ் திரு: 5-2-6.) என்று ஸ்வாமி ஸாதிக்க எல்லோரும் கை கொட்டிச் சிரித்தனர். அந்த வித்யார்த்தி தலை குனிந்து எழுந்து போனார்.

இன்னொருவரைப்பார்த்து ''உண்டே'' பாட்டு சொல்லு என்றார். அவர் முழித்தார். உடனே அடியே னைப் பார்த்து ''பாச்சு, நீ சொல்லு'' என்றார். முதலில் பயந்தேன். ஞாபகத் துக்கு வந்தது. சொன்னேன்.

''நாவாயிலுண்டே நமோ
நாரணவென்று
ஓவா துரைக்கும் உரையுண்டே—
மூவாத
மாக்கதிக்கண் செல்லும்
வகையுண்டே என்னொருவர்
தீக்கதிக்கண் செல்லுந்திறம்?''

''சொல்லிவிட்டாயே'' என்று சந் தோஷித்துச் சிரித்தார்.

கேள்வி: நாலாயிரத்தில் எத்தனையிடத்தில் 'முண்டே' என்று வருகிறது என்றார்.

பதில்: பயத்துடன் இரண்டு இடத்தில் வருகிறது என்றேன்.

கேள்வி: பாட்டைச் சொல்லு

பதில்: (1) "எங்கானு மீதொப்பதோர் மாயமுண்டே" (பெரிய திருமொழி : 10-6-11, (2) "மற்று மோர் தெய்வமுண்டே" [திருமாலை -9.]

நீ 'பாஸ்' எழுந்துபோகலாம் என்றார்.

அடுத்தவரை எந்த ஊர்? என்று கேட்டார். 'ஆள்வார்திருநகரி' என்றார். உடனே அவர்களுக்கு 'ழ' வராதே என்றும். திருவாய்மொழியைத் 'திருவாய்மொளி' என்பர் என்று சொல்லிப் பிறகு அவரைக் கேட்ட கேள்விகள்:

கேள்வி: 'ஏழை ஏதலன்'

பதில்: 'ஏளை ஏதலன்'

கேள்வி: ஆழியெழ

பதில்: 'ஆளி எள'

கேள்வி: ஊழிதோருழி

பதில்: 'ஊளிதோருளி'

கேள்வி: தாளிணை வாழியே

பதில்: 'தாளிணை வாளியே'

இது முடிந்ததும் ஸ்வாமி தர்க்கம் பரீக்ஷைக்குப் போனார்.

(9) திருவல்லிக்கேணி வேத வேதாந்த வர்த்தனீ வருடாந்தர கொண்டாட்டத்தில் கடைசி தினம், மாஜி நீதிபதி ஸ்ரீ. உ. வே. P. M. ஸ்ரீனிவாஸ ஐயங்கார், காஞ்சி ஸ்வாமி 'ஆயிரத்தில் ஒன்று' என்ற விஷயத்தைப்பற்றி உபன்யஸிப்பார் என்று முடித்தார். நல்ல கூட்டம். எல்லோரும் PBA ஸ்வாமி என்ன சொல்லப் போகிறார் என்று திகைத்தனர். எதிரில் உட்கார்ந்திருந்த ஒரு சிறு பையனை "ஆயிரத்தில் ஒரு நம்பர் சொல்லு" என்று நியமித்தார். உடனே அவன் 798 என்று சொன்னான். ஸ்வாமி "கஷ்டமான நம்பரைச் சொல்கிறாயே" என்று சொல்லிவிட்டுச் சட்டென்று முறையே முதலாயிரம். பெரிய திருமொழி, இயற்பா, திருவாய்மொழி ஆகிய ஒவ்வொன்றிலும் 798-வது பாட்டின் சாராம்சத்தை இரண்டு மணி காலம் அமுத மழையாய்ப் பொழிந்தார், (798-வது பாட்டைக் கணக்குப்பண்ணி எடுக்கும் திறமை புலப்படுகிறது.) முதலாயிரம்: திருச்சந்த விருத்தம் (47) 'காரொடொத்த மேனி எங்கள் கண்ணன்'; பெரிய திருமொழி: [8-10-8] "மாணாகி வையம் அளந்ததுவும்"; இயற்பா [பெரியதிருமடல் 130] "அன்னவனை ஆதனூர் ஆண்டளக்கும் ஐயனை"; திருவாய்மொழி [8-3-4] ஞாலம் போனகம்பற்றி ஓர் முற்றாவுருவாகி,

(10) ஒரு சமயம் திருவல்லிக்கேணி வானமாமலை மடத்தில் காலக்ஷேபம் நடந்தது. கூட்டமான கூட்டம். மடம் நிரம்பிக் குளத்துப்படியிலும் அமர்ந்து கேட்டனர். காஞ்சி ஸ்வாமி 2½ மணி காலம் பிரஸங்கம் நடந்தும் முடியவில்லை. சளைக்கவில்லை வேதம், திவ்யபிரபந்தம், ஆசார்யாள் வியாக்யானம், பகவத்கீதை என்று தாவிக்கொண்டிருந்தார்.

நிர்வாகிகள்,—ஸ்வாமி மாத்திரம் காலை மாற்றாமல் இவ்வளவு நாழிகை

உபன்யஸித்ததே தவிர மற்ற எல்லோ ரும் 20 தடவை காலை மாற்றிவைத்து, தூக்கக் கலக்கத்தில் உள்ளார்கள், உபன்யாஸத்தைமுடிக்கலாமே என்று ப்ரார்த்திக்க, ஓஹோ! எழுப்பும் மந் திரம் சொல்ல வேண்டுமா என்று "ஓம் இத்யேகாக்ஷரம்" என்று வேதம் ஓதும் பாணியிலே உரக்க

"டீ த் ஏகாக்ஷரம் காபி இதி த்வே அக்ஷரே ஓவல்டின் ஏதி பஞ்சாக்ஷ ராணி" என்றார் வேடிக்கையாக. உடனே எல்லோரும் புத்துணர்ச்சி யுடன் சிரித்தனர். நான் சொன்னதில் ஏதேனும் தப்பு உண்டோ?

டீ த் ஏகாக்ஷரம்: டீ என்பது ஒரு அக்ஷரத்தாலானது காபி இதி த்வே அக்ஷரே: கா.பி. என்பது இரண்டு அக்ஷரத்தாலானது. ஓவல்டின் ஏதி பஞ்சாக்ஷராணி: ஓ,வ,ல்,டி,ன் என் பது ஐந்து அக்ஷரத்தாலானது. பலத்த சிரிப்புடன் கைதட்டினர். எல்லோரும் விழித்துக்கொண்டனர். இன்னும் 2 மணி காலம் உபன்யாஸம் சொல்லலாம் என்று தொடர்ந்தார். ஐந்துமணி காலம் சொன்னாலும், தனது காலை ஒருதரம்கூட மாற்றி வைத்துக்கொள்ளவே மாட்டார்.

(11) அவர் உபன்யாஸங்களில் வேதம் தெரிந்தவர், திவ்யபிரபந்தம் தெரிந்தவர் வந்தார் என்று தெரிந்தால் போதும்: நடுவில் அவர்களைக் கூப் பிட்டு 'இது எங்கே வருகிறது? அந்தப் பஞ்சாதியைச் சொல்' என்று சபை யிலேயே கேட்பர். ஆகவே, அவர் உபன்யாஸத்தில் வருவதற்கே எவரும் பயப்படுவர்கள். சரியாகச் சொன்னால் போச்சு. இல்லையேல் சபை மத்தியில் பரிஹஸிப்பர்.

(12) காஞ்சியில் ஸ்ரீ. உ. வே. காதி க்ருஷ்ணமாசாரியர் சதாபிஷே கம் நடந்தது. அந்தக் கோஷ்டியில் மாமண்டூர் க்ருஷ்ணமாசார் ஸ்வா மிக்கு ஸம்பாவனை கொடுக்கும்போது "இந்த ஸ்வாமி உரத்த குரலில் ஸேவாகாலம் செய்வர். தப்பாக இருந் தாலும் உரக்கவே சொல்வர்" என்று சபை மத்தியில் கிண்டல் செய்தார். எதற்கும் பயப்படாதவர்.

(13) திருக்கண்ணபுரம் சௌரிப் பெருமாள் ஸம்ப்ரோக்ஷணைக்குச்சென் றிருந்தேன். ஸ்ரீ PBA ஸ்வாமி எல்லா நாளும் கோஷ்டியில் அன்வயித்து உபன்யாஸமும் ஸாதித்தார். சாரி சாரியாக 600 ஸ்வாமிகள் யாகசாலைக் குள் நுழையும்போது ஒருவர் PBA ஸ்வாமியை "தேவள் எல்லா இடங் களுக்கும் எள்ளுகிறதே, அந்த ஸ்வாமி கள் யார் யார் என்று தெரியுமா?" என்று கேட்க, அவர் பதில் "இன்னா ரென்றறியேன்" (பெரியதிரு: 10.10.9.) என்றார். அங்கு 5-ஆந் திருநாள் — காஞ்சி ஸ்வாமி உபன் யாஸம். இடையில் அவர் ஸாதித்த விஷயம். "இங்கு யாகசாலை நிர்வாகம் ஸ்ரீவில்லிபுத்தூர் அலங்கார பட்டர் ஸ்வாமியுடையது. பெரு மாளோ சௌரிப்பெருமாள். சௌரி யில் உயர்ந்த பரிமளமான புஷ்பங் களைச் சாத்திக்கொண்டிருக்கிறார்: அந்த ஊரே மணக்கும்படி அவ்வளவு வாஸனை மூக்கைத் துளைக்கிறது. ஆனால் ஐந்துநாளாய் இரண்டுவேளை பிரதி தினமும் பெருமாள்கிட்ட ஸேவைபண்ணிவைத்தார்கள். ஆனால் அடியேன் கையில் கிடைத்தது துளசி தான். ஒரு புஷ்பம்கூட இல்லை. இதன்

